பக்தமான்மியம்

# குசேலர் கதி

(மூலமும் உரையும்)



ஆசிரியர்

தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

சிரவை கௌமார சபை வெளியீடு

விய வருடம் புரட்டாசி மாதம் 2006

உ

குருவே துணை

பக்தமான்மியம்

# குசேலர் கதி

(மூலமும் உரையும்)

நூலாசிரியர்

சிரவையாதீனம்

**தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்**

உரையும் பதிப்பும்

சிரவையாதீனக் கவிஞர்

**புலவர். ப.வெ. நாகராஜன்**



சிரவைக் கௌமார சபை வெளியீடு

விய வருடம் புரட்டாசி மாதம்

2006

| | | |
|---|---|---|
| சிரவைக் கௌமார சபை வெளியீடு எண் | : | 261 |
| நூல் பெயர் | : | பக்தமான்மியம் குசேலர் கதி (மூலமும் உரையும்) |
| நூலாசிரியர் | : | சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் |
| உரையும் பதிப்பும் | : | சிரவையாதீனக் கவிஞர். ப.வெ. நாகராஜன் |
| பதிப்பு | : | உரையுடன் முதற் பதிப்பு |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 20.00 |
| வடிவமைத்து அச்சிட்டோர் | : | சௌமி பிரிண்டர்ஸ்<br>69-D, சிறுவாணி மெயின் ரோடு<br>பேரூர், கோவை-641 010.<br>போன் : 98422-52779 |



நூல் கிடைக்குமிடம் :

தலைவர்
சிரவணபுரம் கௌமார மடாலையம்,
சின்னவேடம்பட்டி (அ.நி),
கோவை-641 006.
தொலைபேசி: 2666370.



# ஆசியுரை

**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்**
சிரவையாதீனம்,
சிரவணபுரம் கௌமாரமடாலயம்,
கோவை - 641 006.
தொலைபேசி: 2666370, 98430 66373.

நம் திருமடத்தின் இரண்டாவது குருமகாசந்நிதானமாக விளங்கிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் தமிழ்ப்பெருங்கவிஞராய் விளங்கினார். வைணவத் திருத்தொண்டர் புராணம் என்று கூறத்தக்க பக்தமான்மியம் இவரால் இயற்றப்பெற்றது. இது திருமால் அடியார்கள் 103 பேரின் வரலாற்றை 7373 பாடல்களில் கூறுகிறது.

வடமொழியில் சந்திரதத்தர் என்பவர் இயற்றிய பக்தமாலா என்னும் நூலின் மொழி பெயர்ப்பு இது. பெரும்பாலும் வட இந்தியாவில் பிறந்து வடமொழி, மராத்தி, இந்தி முதலிய மொழிகளில் நூல் இயற்றியவர்களின் சரிதங்களே இடம் பெற்றுள்ளன. நம் சுவாமிகள் மூல நூலில் இருப்பதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார் என்பதை, "இரும்பத்தர் கானாத வடமொழியதனால் சொன்ன சந்திரதத்தற் போற்றிச் சற்றும் மெய் மாறா வண்ணம் தந்திரத் தமிழால் பத்தர் மான்மியம் சாற்றுவேனே" என உணர்த்தியுள்ளார்.

இவ்வளவு பெரிய நூலை இயற்றும் பொழுது நம் சுவாமிகளுக்கு வயது முப்பத்தாறுதான் என்பது வியப்பிற்குரியது. இது 1928 மே மாதம் மூலம் மட்டுமாக முதல் பதிப்பு வெளியாயிற்று. 78 ஆண்டுகள் நிறைவேறி விட்டன. அப்பதிப்பு அந்தக் கால முறையில் சந்தி பிரிக்காமலும், உரை இல்லாமலும் பதிக்கப்பட்டது. இப்பொழுது அதனைப் படித்துப் பொருள் உணர்ந்து கொள்வது கடினம். இந்தப் பக்தமான்மியப் பெருநூல் தமிழ் கூறும் நல்லுலகின் அறிஞர்கள் அனைவராலும் அறியப்படவேண்டும். இதில் இடம்பெற்றுள்ள பல வரலாறுகள் தமிழர்களுக்குப் புதியது.

எனவே பக்தமான்மியப் பெருங்காப்பியத்தை மூலபாடம் சந்தி பிரித்த வடிவிலும், தெளிவான உரை, விசேட உரை, ஆய்வுக் குறிப்புகள், பிற நூல் ஒப்பீடு, சிறப்புப் பெயர் அகராதி முதலியவற்றோடும் கைக்கு அடக்கமான எட்டுத் தொகுதிகளாக அடக்க விலையில் பதிப்பிக்க விழைகிறோம். கௌமார மடாலய அன்பர்கள் இந்தத் தமிழ்ப் பணியாகவும் குருகாணிக்கையாகவும் அமையும் பதிப்புப் பணிக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டுகிறோம்.

அத்தகையதொரு பெரியபதிப்புக்கு முன் மாதிரியாக இப்பொழுது குசேலர் கதி மட்டும் வெளியிடப்படுகிறது. பக்தமான்மிய அரங்கேற்றம் விபவ ஆண்டு வைகாசி மூலமாகிய 05.06.1928 அன்று நிறைவேறியது. அதன் முதல் உரைப்பகுதி விய ஆண்டு நவராத்திரியில் வெளிவருகிறது. குருவருளாலும் திருவருளாலும் இப்பதிப்புப் பணி முறையாக மேற்கொள்ளப்பட்டுச் சிறப்பாக நிறைவடைய வேண்டுமென விழைகிறோம்.

இப்பொழுது இந்தக் குசேலர் கதிக்குத் தெளிவான உரைகண்டு சிறப்பாகப் பதிப்பித்திருப்பவர் நம் ஆதீனக் கவிஞர் பெரும்புலவர். ப.வெ. நாகராஜன் அவர்கள் ஆவார். ஏற்கனவே தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் பல நூல்களைப் பாங்குறப் பதிப்பித்துள்ள இவருடைய உரையாற்றலையும், பதிப்புச் சீர்மையையும் நல்லறிஞர்கள் நன்குணர்வர். புலவர். ப.வெ. நா. அவர்கள் எம் குருநாதர் தவத்திரு. கஜபூஜைச் சுந்தரசுவாமிகள் அவர்களின் பேரன்பிற்குப் பாத்திரமானவர். சுவடியியலிலும் சித்திர கவிகளுக்கு உரை காண்பதிலும் வல்லவர். இந்தக் குசேலர் கதியின் செய்யுள்களைத் தெளிவான உரையோடும் தேவையான விளக்கங்களோடும் சிறப்பாகப் பதிப்பித்து வழங்கியுள்ளார். அவருக்குப் பாராட்டுத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

சரவணம்பட்டியைச் சேர்ந்த, நூலாசிரியரின் பூர்வாசிரமத் தமக்கையாரும் வளர்ப்புத் தாயுமான திருமதி. பூவாத்தாள், மற்றும் அன்னாரது கணவர் திரு. மருதமலைக் கவுண்டர் ஆகியோரது நினைவாக அன்னாரது குடும்பத்தினர் இப்பொழுது இந்தக் குசேலர் கதியைத் சௌமி பிரிண்டர்ஸ் அச்சகத்தின் வழியாக அச்சிட்டு வழங்குகின்றனர். பக்தமான்மியத்தின் முதல் பதிப்பும் சிரவணம்பட்டி உயர்திரு. முத்துக்கவுண்டர் அவர்கள் குமாரர். உயர்திரு. சுப்பையா என்னும் பழனிக் கவுண்டர் அவர்களின் பொருளுதவி கொண்டே வெளியாயிற்று. சௌமி பிரிண்டர்ஸ் அதிபர் திரு. திருஞானசம்பந்தன் அவர்கள் கௌமார மடாலயத்தோடு மிகத் தொடர்புடைய குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய கொடைத்திறம் மிகப் பாராட்டற்பாலது. அவர் உற்றார் உறவினர்களுடன் குருவருளால் எல்லா வளங்களையும் பெற்று நீடினிது வாழ வாழ்த்துகிறோம்.

குசேலருடைய வரலாற்றைப் படிப்பவர்களுக்கு வாழ்வில் வறுமையே வராது என்றும், ஊழ்வினையால் வந்தாலும் திருமகள் கேள்வன் திருவருளால் அது விரைவில் நீங்கிவிடும் என்றும் பெரியோர்கள் கூறுவர். "இக்கதை எழுதி வைப்போர் பொதிதரும் அன்பிற் கேட்போர் பூசிப்போர் படிப்போர் யாரும் கதிர்தரு செல்வம் பெற்றுக் கான்முளை பல்க வாழ்ந்து மதிநலம் படைத்துப் பின்னர் வான்கதி அடைந்து வாழ்வார்" என்கிறது குசேலோபாக்கியானம். அன்பர்கள் இவ்வரலாற்றைப் படித்து இகபர சவுபாக்கியம் பெற்றுப் பொலிய வாழ்த்துகிறோம்.

குருவே துணை

# பதிப்புரை

சிரவையாதீனத்தின் இலக்கியப்பணிகளில் மணிமுடியாகத் திகழ்வது பக்தமான்மியப் பெருங்காவியம். வடமொழியில் சந்திரதத்தர் என்பவர் பக்தமாலா என்னும் பெயரில் சிவனடியார்கள், திருமாலன்பர்கள்,தேவிதாசர்கள் ஆகிய முத்திரத்தாருள் தேர்ந்தெடுத்த பலரைப் போற்றும் ஒரு மாபெரும் காப்பியத்தை இயற்றியுள்ளார். அந்நூலின் அரிதாசர்களாகிய பாகவதர்களின் வரலாற்றை மட்டும் தமிழில் மொழிபெயர்த்த அரிய காப்பியம் பக்தமான்மியம்.

இதில் நாபதாசர் முதல் துக்காராமர் வரையான 103 பரம பாகவதர்களின் வரலாற்றுக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. வரலாறு என்றால் பிறந்தது முதல் பரமபதம் அடைந்தது வரையான முழு வாழ்க்கை வரலாறும் இடம்பெறவில்லை. எந்தெந்த காரணங்களால் பாகவதராக மதிக்கப்பட்டாரோ, இறைவனருள் பெற்றாரோ அந்த நிகழ்ச்சிகள் மட்டுமே கூறப்பட்டுள்ளன.

இது மொழி பெயர்ப்பே ஆயினும் மூல நூலுக்குரிய அனைத்து இலக்கியக்கூறுகளையும் தன்பால் பெற்று விளங்குகிறது. தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் செய்யுள் நடை திரிசொற்களின் ஆட்சி, செறிவு, சித்திரத்தன்மை, பெருமிதம் ஆகியன வாய்ந்த கௌட நெறித்தது ஆகும். எனவே பொழுது போக்குப் புத்தகம் போல ஒரே மூச்சில் படித்து முடித்து விட முடியாது. ஒவ்வொரு விருத்தமாக படித்து, சிந்தித்து, உணர்ந்து, சுவைத்த பிறகு அடுத்ததற்கு போகவேண்டும்.

இத்தகைய பக்தமான்மியத்தின் ஒன்பதாவது பகுதியாக அமைந்தது குசேலர் கதி (இக்காப்பியத்தின் ஒவ்வொரு உட்பிரிவும் கதி என வழங்கப்படும் - பிரபு லிங்க லீலையைப் போல). இதில் குசேலர் பற்றிய நிகழ்ச்சிகள் 84 விருத்தங்களில் கூறப்பட்டுள்ளன. இதன் உரைநடைச்சுருக்கம் இப்பதிப்பாய்வுறையை அடுத்து தரப் பெற்றுள்ளது.

கௌமார நெறியின் தலைமைக் கொள்கையாகிய குருபரத்துவத்தில் ஊன்றி நின்ற கந்தசாமி சுவாமிகளின் குருபக்தி ஈடிணையற்றது. இதன் வெளிப்பாடாகவே பக்தமான்மியத்தின் சந்திரதத்தர் முதல் துக்காராமர் முடிய உள்ள பாகங்கள் அனைவருமே ஒப்பற்ற பரம்பொருளின் அம்சமே என்றும், தம் ஞானாசிரியராகிய ஸ்ரீலஸ்ரீ இராமானந்த சுவாமிகளும் அதுவே என்றும் கொண்டு, ஒவ்வொருவர் வரலாற்றின் இறுதியிலும் அப்பாகவதரின் சிறப்பை குறிப்பிட்டு அவரே தம் குருநாதர் என முடித்துள்ளார். இதனை அந்தப்பகுதியின் சாரமாக கொள்ளலாம். இவ்வாறு அமைந்த பன்னிருசீர் ஆசிரிய விருத்தங்கள் எல்லாம், "இராமானந்தப் பெயர்கொடு எனது இதயத்து இலங்கும் பெருமாளே" என்னும் மகுடம் கொண்டு முற்றுப்பெறுகிறது. குசேலகதிக்குரிய இவ்விருத்தமும் உரிய இடத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

குசேலருடைய வரலாறு நாடறிந்த ஒன்று. இந்திய துணைக்கண்டம் முழுவதிலும் வறுமைக்கு எடுத்துக்காட்டாக இவர் பெயரே பயன்படுத்தப்படுகிறது. குசேலர் என்னும் வடமொழிச் சொல்லுக்கு கிழிந்த ஆடையைத் தரிப்பவர் என்பதே பொருள். இந்திய இலக்கியத்தில் இவர் வரலாறு முதன் முதலாக வடமொழிப் பாகவதத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. தமிழ் பாகவத மொழிபெயர்ப்புகளிலும் இது சுருக்கமாக - ஆனால் அழகாக இடம் பெற்றுள்ளது. தெலுங்கு மொழியில் வரகவி என்னும் கவிஞர் இவர் வரலாற்றை குசேலோபாக்கியனம் என ஒரு காவியமாக இயற்றியுள்ளார். பெரும்பாலும் அதனைத் தழுவி நல்லூர் தேவராசப்பிள்ளை குசேலோபாக்கியனம் என்னும் காப்பியத்தை 773 விருத்தங்களால் இயற்றினார். இக் காப்பியத்தின் பெரும்பகுதி மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுடையது என்றும் சொல்லப்படுகிறது.

பண்டைய நூல்களில் குசேலர், அவருடைய மனைவி ஆகியோரின் பெயர்கள் முறையே சுதாமா, சுசீலை என்றும் கூறப்பட்டுள்ளன. ஆனால் பக்தமான்மியத்தில் இப்பெயர்கள் கூறப்படவில்லை. வடமொழி மூலத்தோடு தமிழ்ப் பக்தமான்மியத்தை ஒப்பிட்டுப் பார்த்த பிறகு இம்மொழிபெயர்ப்பைப் பற்றி இலக்கிய ரீதியான ஆய்வில் நுழைய முடியும். இப்போதைக்கு திருமால் அடியாரின் பெருமையைச் சிறப்பிக்கும் நூல் எனச் சமயக் கண்ணோட்டத்துடன் மட்டுமே காண முடியும்.

குசேலர் வைராக்கியம் மிகுந்தவர். நிலையாமையே நிலையானது என உணர்ந்தவர். எனவே அவர்பால் உலகியற் சிந்தனைகளே இருக்கவில்லை. (அவருக்கு 27 குழந்தைகள் என்பது கூட வறுமையை விவரித்துக் கூற வாய்ப்பாக அமைத்துக் கொண்ட கற்பனையாக இருக்கலாம். இவ்வரலாற்றில் இது ஒரு தர்க்க ரீதியான ஓட்டை என்பதனை மறுக்க முடியாது.) பக்தமான்மிய ஆசிரியர் ஆகிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகளும் வைராக்கியம் மிக்கவர். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் நிலையாமையை வற்புறுத்தத் தயங்காதவர். எனவே குசேலரின் வரலாறு சுவாமிகளுக்கு தன் கருத்தை வலியுறுத்த வாய்ப்பாக அமைந்து விட்டது. அதனால் உலகியல் இன்பங்களில் நிலையாமையை வற்புறுத்திக் கூறி இறைவன் திருவடிகளைச் சிக்கெனப்பற்றுவதைத் தவிர ஆன்ம ஈடேற்றத்திற்கு வேறு வழியே இல்லை என வலியுறுத்துகிறார்.

இந்தப்பகுதியின் போக்கு தமிழ்க் குசேலோபாக்யானக் காப்பியத்தையும் ஆங்காங்கு நினைவூட்டிக் கொண்டே இருக்கிறது. ஆனால் வடமொழி பக்தமாலாவைப் பார்க்காமல் இதனை குசேலோபாக்கியானத்தோடு ஒப்புநோக்குவது இலக்கிய ரீதியாக சரியாகாது. இது ஒரு மொழிபெயர்ப்பு நூல் என்னும் உணர்வுடனேயே பார்க்கப்படவேண்டும்.

தவத்திரு. சுவாமிகளின் புலமையும் படைப்பாற்றலும் அற்புதமானது. முன்பே கூறப்பட்டபடி ஆழமாகப் படித்து சுவைக்க வேண்டியது. இந்த குசேலர் கதியை

உள்ளடக்கிய பக்தமான்மியப் பெருநூல் மூலம் மட்டுமாக 05.06.1928ல் ஒரே ஒரு முறை பதிப்பிக்கப்பட்டது. 80 ஆண்டுகள் ஆகிவிட்ட படியால் இப்போது இதன் படிகள் மிக அரியனவாகிவிட்டன.

இந்த பக்தமான்மியத்தை இன்றைய அன்பர்களுக்கு ஏற்பச் சந்தி பிரித்து. தெளிவான உரை. இன்றியமையாத குறிப்புரை. ஆய்வுக் குறிப்புகள். பிற நூல் ஒப்பீடு. சிறப்புப் பெயர் அகராதி முதலியவற்றோடு கைக்கு அடக்கமான எட்டுத் தொகுதிகளாக அடக்க விலையில் பதிப்பிக்க வேண்டும் என சிரவையாதீன கர்த்தர் தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள் திருவுளம் பற்றியிருக்கிறார். மிகப்பெரிய பணி; ஆனால் மிக மிக இன்றியமையாப் பணி.

அந்த எட்டுத் தொகுதிகளுக்கும் வெள்ளோட்டமாக இப்பொழுது குசேலர் கதி உரையுடன் வெளிவருகிறது. உரை எழுதும் போது புத்தகத்தின் பக்கங்கள் பல்கிவிட கூடாது எனக் கவனமாக எழுதப்பட்டுள்ளது. அதனால் பொதுவாக தெரியும் செய்திகள் விளக்கப்படவில்லை. பொருள்கோளுக்கு இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. சுவாமிகளின் வாக்கு மிக விரிவான விருத்தியுரைக்கு இடம் கொடுக்கும்; ஆனால் இன்று படிப்பதற்கு நேரம் வேண்டுமே.

ஆதீனத்தின் பேரன்பர்கள் குசேலர் கதியை தனிநூலாக வெளியிடவேண்டுமென கேட்டுக் கொண்டதால் சுவாமிகள் அப்பணியை எளியேனுக்கு ஒப்படைத்தார். பக்தமான்மியப் பெருங்காவியம் எங்கே? ஒன்றுக்கும் பற்றாத அடியேன் எங்கே?. சுவாமிகளின் அருளாணையை ஏற்று என் சிற்றறிவுக்கு ஏற்றபடி உரை கண்டுள்ளேன். செம்மொழியாம் தமிழ்ப் பெருங்கடலுள் மூழ்கி முக்குளிக்கவல்ல அறிஞர் பெருமக்கள் இதன் கண் உள்ள குற்றங்களைந்து ஏற்கவேண்டுகிறேன்.

சிரவையாதீன கர்த்தர் தவத்திரு. சுவாமிகள் அவர்கள் இப்பணியை எம்பால் ஒப்படைத்தமைக்கு என் பணிவான நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன். சிரவையாதீனத்தைச் சார்ந்த என் இலக்கியப்பணிகள் அத்தனைக்கும் எனக்கு உறுதுணையாக விளங்கும் சிரவையாதீனப்புலவர் திரு. கு. சிவலிங்கம் எம்.ஏ., பி. எட்., அவர்களுக்கு நல்வாழ்த்துக்கள். கௌமார மடாலயத்தோடு இடையறாத ஈடுபாடு கொண்டவர்கள் சௌமி பிரிண்டர்ஸ் அச்சகத்தார். அவர்கள் கந்தசாமி சுவாமிகள் நூல்கள் முழுவதையும் அச்சிட்டுத் தரவேண்டும் என விழைகின்றேன். இந்த நூலை உரிய காலத்தில் அழகாக நிறைவேற்றிக் கொடுத்த சௌமி பிரிண்டர்ஸ்ஸாரின் பணி மிகப் பாராட்டற்பாலது. அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலைக் கண்ணுறும் அறிஞர் பெருமக்கள் இதன் நிறை குறைகளைத் தெரிவித்தால் அக்கருத்துரைகள் பக்தமான்மியத்தின் ஏனைய பகுதிகளை பதிப்பிக்க வழிவகையாக அமையும்.

**சென்னை** **ப.வெ. நாகராஜன்**
**01.05.2006**

## குசேலர் கதி – உரைநடைச்சுருக்கம்

துவாரகை நகரை அடுத்திருந்த சிற்றூராகிய அந்தணர் சேரி ஒன்றில் குசேலர் என்னும் ஒரு வேதியர் வாழ்ந்து வந்தார். இவர் சாந்தீபனி முனிவரிடத்தில் வேத வேதாந்தங்களை எல்லாம் ஐயம் திரிபறக் கற்றவர். அப்பொழுது கண்ணபெருமான் இவருடைய ஒரு சாலை மாணாக்கர். இருவரும் நெருங்கிய நண்பர்கள்.

கல்வி நிறைவேறிய பின் தத்தம் வீடு திரும்பிய இருவருள் காலப்போக்கில் கண்ணபெருமான் துவாரகையின் மன்னரானார். குசேலர் திருமணம் செய்து கொண்டு இல்லறத்தில் ஈடுபட்டிருந்தாலும் உலகியல் செயல்களில் சிந்தனையே செலுத்தாத வைராக்கிய சீலராகத் திருமாலின் திருவடித் தியானத்தைத் தவிர வேறு எண்ணமே இல்லாதவராக இருந்தார். பொருளீட்டும் தொழில் ஒன்றையும் மேற்கொள்ளாததால் எப்பொழுதுமே வறுமையில் வாடினார். இந்நிலையில் பல மக்களும் பிறந்து விட்டனர்.

கற்பிற்சிறந்த மனைவி பெரிய குடும்பத்தை நடத்திச் செல்லுவதற்கு மிகவும் இன்னலுற்றார். ஒரு நாள் தன் கணவரிடம், "தங்கள் பள்ளித் தோழனான கண்ணபெருமானை ஒருமுறை சந்தித்து விட்டு வந்தால் குழந்தைகளின் அல்லல் அழியுமே" என மனமுருக எடுத்துரைத்தார். தொடக்கத்தில் தோழனிடத்தில் சென்று உதவி நாடுவது தான் ஏற்றுள்ள இரவாமை என்னும் நோன்பிற்கு (அயாசித விரதம்) ஏற்புடையதாகாது என மறுத்ததுடன் பொருளின் நிலையான்மையையும் வலியுறுத்தி மறுத்து விட்டார்.

எனினும் கணவன் என்ற முறையில் மனைவி மக்களைக் குறையின்றிப் பேண வேண்டும் என்னும் உலகியற் கடமை உணர்வும் ஏற்பட, ஒருவாறு துவாரகை சென்று கண்ணபெருமானைக் கண்டுவர இணங்கினார். மன்னனும் தோழனுமான கண்ணபெருமானைப் பார்க்கும்போது கொடுப்பதற்கு ஏதாவது கையுறை வேண்டுமே? பாவம்! குசேலரால் என்ன கொடுக்க முடியும்? அவர் மனைவி அதற்கும் ஒரு வழி செய்தார். பலவீடுகளில் இருந்து உஞ்சவிருத்தியாக (இல்லறத்தார் தாமே வலிய வந்து தருவதை மட்டும் இரவாமல் பெற்றுக் கொள்ளுதல்) வந்த நெல்லில் அரைப்படி இருந்தது. அதனைப் பக்குவமாக அவலாகச் செய்து கந்தைத் துணி ஒன்றில் பொட்டலமாகக் கட்டிக் கொடுத்தார்.

குசேலர் அதனை எடுத்துக்கொண்டு துவாரகை சென்றார். கண்ணபெருமானைச் சந்தித்தார். மன்னர் தம் பழைய நட்பு மாறாமல் இருப்பதைக் கண்டு மிக மகிழ்ந்தார். கண்ணபிரான் குசேலரை நன்றாக உபசரித்தார். அவரே வலியக் கேட்டு வாங்கி ஒருவாய் அவலை உண்டார். குசேலருக்கு ஒன்றுமே கொடுக்காமல் பத்திரமாகப் போய்வாருங்கள் என விடை கொடுத்து அனுப்பிவிட்டார்.

ஆவிற்குநீர் என்று கூடக் கேட்காதவராகிய குசேலர் எதுவுமே கேட்கவில்லை;

அவருடைய நோன்பிற்குப் பங்கம்வரக்கூடாது என்பதற்காகவோ என்னவோ கண்ணபிரானும் அவரிடம் ஒன்றுமே கொடுக்கவில்லை. வெறும் கையராகத் திரும்பும் வழியில் பலவாறு சிந்தித்துக்கொண்டே வந்தார். ஆனால் கொஞ்சமும் வருந்தவில்லை. அவரிடம் கண்ணபெருமானைச் சந்தித்த மனநிறைவு மட்டுமே நிறைந்திருந்தது.

தன் சிற்றூரை அடைந்த குசேலர் தம் குடிசை கண்ணன் திருவருளால் பெரிய மாளிகையாக மாறியிருந்ததுடன் அனைத்து வகை பொருட்களும் நிறைந்திருக்கக்கண்டார். மனைவி மக்களின் மனநிறைவைக்கண்டு மன அமைதி பெற்றார். அத்தனை செல்வங்களும் இருந்தபோதும் குசேலர் உலகியலில் தாமரை இலைத் தண்ணீராகவே வாழ்ந்திருந்து உரிய காலத்தில் வாழ்க்கைத்துணைவியுடன் வைகுந்தப் பதவி பெற்றார்.



பக்தமான்மியம்

## குசேலர் கதி

(காப்பியக் கலித்துறை)

01 பதும நாபன்நல் பத்திஅம் கடலிடைப் படிந்த
விதுர மன்னவன் சீர்மனை திறத்துடன் விண்டேன்;
மதுர மாமறைத் திரள்உணர்ந் திடும்மதி சான்ற
அதுல, மிக்கசீர்க் குசேலமா தவன்திறம் அறைவாம்.

பதும நாபன்நல் பத்திஅம் கடலிடைப் படிந்த - திருமால் பக்தி என்னும் அழகிய சமுத்திரத்தில் ஆழுங்கால் பட்டவராகிய,

விதுர மன்னவன் சீர் - விதுரர் என்னும் தலைவரின் பெருமையை,

மனை திறத்துடன் விண்டேன் - அவருடைய மனைவியின் பக்திச்சிறப்போடு (சென்ற நூற்பிரிவில்) எடுத்துரைத்தேன்;

மதுர மாமறைத் திரள்உணர்ந் திடும்மதி சான்ற - இனிமை மிக்க பெரிய வேதக்கூட்டங்களைத் தெளிவாகப் புரிந்து கொண்ட அறிவு மிக்கவரும்,

அதுல - இணையற்றவரும்,

மிக்கசீர்க் குசேலமா தவன்திறம் அறைவாம் - மிகுந்த சிறப்பினை உடையவரும் ஆகிய குசேலர் என்னும் பெரும் தவசீலரின் இறையன்பை (இப்பிரிவில்) கூறலுறுகின்றேன்.

02 பசேலு கன்புரி பண்டம்நன் றினைப்பல காலும்
விசேடம் மிக்கதால் இஃதுஎன மிசைதரும் வேலைச்
சுசேல கப்புவி யினர்கொளப் புலவர்முன் சொற்ற
குசேலன் நல்கதி புகல்வதுஅன் பினர்களி கொளவே.

பசேலுகன் புரி பண்டம் ஒன்றினை - சமையற்காரர் சமைக்கின்ற ஒரு உணவுப்பொருளை

விசேடம் மிக்கது இது என - சிறப்புடையது எனக் கருதி

பலகாலும் மிசை தரும் - பலமுறை விரும்பி உண்ணும் இயல்பினராகிய

வேலை சுசேலக - கடலாகிய நல்ல ஆடையை உடுத்தியுள்ள

புவியினர் கொள - உலகமக்கள் ஏற்றுக்கொள்ளுமாறு

முன் புலவர் சொற்ற குசேலர் நல் கதி புகல்வது - ஏற்கனவே பல அறிஞர்களால் கூறப்பட்டுள்ள குசேலரின் வரலாற்றை (இந்நூலிலும்) எடுத்துரைப்பது.

அன்பினர் களிகொளவே - பக்தர்கள் மகிழ்ச்சி அடைவதற்காக மட்டுமே ஆகும்.

(குறிப்புரை) சிறந்த உணவுப்பண்டத்தைப் பலமுறையும் விரும்பி சுவைப்பதைப்போல அடியார் பெருமையையும் பலமுறை கேட்டு மகிழவேண்டும் என்பது உட்கோள். தமிழில் உள்ள இரண்டு பாகவதங்களிலும், வல்லூர் தேவராசபிள்ளை அவர்களின் குசேலோபாக்கியானம் என்னும் சிறுகாப்பியத்திலும் குசேலரின் வரலாறு கூறப்பட்டுள்ளது. இவற்றையன்றி மேலும் பல நூல்களிலும் இடம்பெற்றுள்ளது. பலரால் பல வடிவங்களில் கூறப்பெற்ற வரலாறு தானும் கூற மேற்கொண்டதற்கு ஆசிரியர் காரணம் கூறுகிறார். பக்தமான்மியத்தின் மூல நூலாகிய பக்தமாலா என்னும் வடமொழி நூலில் இருப்பதால் கூறுவதைவிட இக்காரணம் சிறப்புடையது.

மிசை தரும் புவியினர், சுசேலகப் புவியினர் எனத் தனித்தனி இயையும். இரண்டாம் அடியில் ஆல் அசை, சுசேல, குசேல அடி முரண்தொடை, பொருள் முரண். ஈற்றேகாரம் பிரிநிலை.

*03 உவாம திக்குஅருகு ஓங்கிய அரமியத்து உம்பர்*
*சுவாக தம்கொளக் கிளத்துபொன் தொடியினர் சொல்லை*
*அவாவி வானவர் அணுகுறும் தண்டலை அமைந்து*
*துவார கைப்பெயர் பெற்றுஉயர் திருநகர் துலங்கும்*

உவா மதிக்கு அருகு ஓங்கிய அரமியத்து உம்பர் - அமாவாசை, பௌர்ணமி ஆகியவற்றிற்குக் காரணமாகிய சந்திரமண்டலத்தின் பக்கம் வரை உயர்ந்து விளங்கிடும் நிலா முற்றத்தில்

சுவாகதம் கொள் கிளத்து பொன் தொடியினர் சொல்லை அவாவி - கிளிகளைப் பேசப் பயிற்றுவிக்கும் அழகிய வளையல்களை அணிந்த மகளிரின் சொல்லினிமையைச் சுவைக்க விரும்பி

வானவர் அணுகுறும் தண்டலை அமைந்து - தேவலோகத்தவர்களும் வந்து பொருந்தும் பூஞ்சோலைகளை தன்பால் பெற்று

உயர்திருநகர் - நாளுக்கு நாள் வளர்கின்ற தெய்வீகத்தை உடைய நகரமானது

துவாரகைப் பெயர் பெற்று துலங்கும் - துவாரகை என்னும் நாமத்தை உடையதாகச் சீரோடு விளங்கும்

(குறிப்புரை) உவாமதி கார் உவா, எ வள் உவாவிற்குக் காரணமாகிய சந்திரன். நான்கன் உருபும் பொருளும் உடன் தொக்க தொகை. வானவர் என்புழி உயர்வு சிறப்பும்மை விரிக்க. உயர்வு நவிற்சி அணி.

04 சீர்இ யைந்தஅந் நகர்க்குஅரு குஆகியே செழுமைக்
கார்இ யைந்திடும் படி மிக நீண்டுகா னவரும்
சூர்இ யைந்திடத் துலங்கும்மால் வரைஅயல் சூழ்ஓர்
சேரி ஐந்துஅவித் தவர்திரள் வதிதரத் திகழும்.

சீர் இயைந்த அ நகர்க்குஅருகு ஆகியே - சிறப்புப் பொருந்திய அந்தத் துவாரகை என்னும் ஊருக்குப் பக்கத்திலேயே

செழுமை கார் இயைந்திடும்படி மிக நீண்டு - நீருண்டு வளம் பெற்ற மேகங்கள் வந்து சேரும் வண்ணம் மிக்க உயர்ச்சியைப் பெற்று

கானவரும் சூர் இயைந்திட - வேடர்களும் கண்டு அஞ்சும் படியாக

துலங்கும் மால் வரை அயல் சூழ் ஓர் சேரி - விளங்குகின்ற பெரிய மலைக்கு அருகில் அமைந்துள்ள மக்கட் குடியிருப்பு

ஐந்து அவித்தார் திரள் வதிதரத் திகழும் - ஐந்து புலன்களையும் அடக்கியாளும் திறம் படைத்த தவசியர் கூட்டம் வசிக்கும் படிப் பெருமையோடு விளங்கும்

(குறிப்புரை) நகர்க்கு அருகே மால் வரை அயல் சேரி வதிதரத் திகழும் என்பது பொருள் முடிபு. கானவரும் உயர்வு சிறப்பு. சேரி என்பது இலக்கியத்தில் மக்கள் சேர்ந்து வாழும் குடியிருப்பு என்னும் பொதுப் பொருளிலேயே வழங்கும். இன்றைய பேச்சு வழக்கில் பொருள் வேறு.

05 விசேடம் என்றுஇயல் புலமைஉற் றோர்எலாம் விளம்பல்
அசேடம் எய்திடக் கொண்டஅத் தனிநக ரதன்கண்
பசேலி மன்பகை துரக்கும்அந் தணர்தவப் படிவாய்க்
குசேல நாமமா தவன்நலம் கொள்ள அங் குரித்தான்.

விசேடம் என்று இயல்புலமை உற்றோர் விளம்பல் எலாம் - சிறப்பு வாய்ந்தவை என அறிஞர்களால் கூறப்படும் பொருள்கள் அனைத்தையும்

அசேடம் எய்திட கொண்ட - சற்றும் மீதமில்லாமல் முழுமையாகத் தன்பால் அமையப்பெற்ற

அ தனி நகரதன்கண் - துவாரகை ஆகிய அந்த ஒப்பற்ற ஊரில்

பசேலிமன் பகை துரக்கும் அந்தணர் தவ படிவாய் - சூரியனின் பகைவர்களைப் போக்குகின்ற வேதியர்கள் செய்த புண்ணியச் செயல்களின் பயனாக

குசேல நாம மாதவன் நலம் கொள்ள அங்குரித்தான் - குசேலர் என்னும் பெயருடைய பெரும் புண்ணியவான் உலகம் நன்மை அடையுமாறு தோன்றினார்.

(குறிப்புரை) மந்தேகர் என்னும் ஓர் அரக்கர் கூட்டம் பிரமனை நாடித் தவம் புரிந்து சூரியனின் தேரைத் தடை செய்யும் வலிமையைப் பெற்று நாள் தோறும் தடை செய்வர். இந்த அரக்கர்களை அந்தணர்கள் தினந்தோறும் வழங்கும் அர்க்கியத்தில்

காயத்திரி என்னும் கணைகளால் அழிப்பர். எனினும் அந்த அரக்கர்கள் தம் வர பலத்தால் மீண்டும் உயிர்த்தெழுவர். மீண்டும் வேதியர்களின் காயத்திரியால் கொல்லப்படுவர் என்பது நூற்றுணிபு. இதனையே பசேலிமன் பகை துரக்கும் அந்தணர் என்றார். நகரதன்கண் என்புழி; அது பகுதிப்பொருள் விகுதி.

*06*

***உதித்த பாலகன் உற்றநல் குணம்எலாம் உடனே***
***கதித்து, நாள்தொறும் வளர்ந்திட வளர்ந்து, நல் கலையின்***
***முதிர்ச்சி சான்றசாந் தீபனி முனிவர னிடத்தில்***
***பதித்த சிந்தையோடு அருமறை ஆதிய பலவும்***

உதித்த பாலகன் - பிறந்த குசேலராகிய மைந்தன்

உற்ற நல் குணம் எலாம் உடனே கதித்து - தான் பெற்றிருந்த நல்ல பண்புகள் யாவும் தன்னுடனேயே மிகுதியாகி

நாள்தொறும் வளர்ந்திட வளர்ந்து - தினந்தோறும் வளரும் படித் தானும் வயதளவிலே வளர்ந்து

நல் கலையின் முதிர்ச்சி சான்ற சாந்தீபனி முனிவரனிடத்தில்- நல்ல கல்வியில் பெரும் புலமை மிக்க சாந்தீபனி என்னும் முனிவர் பெருமானிடத்தில்

அருமறை ஆதிய பலவும் - அருமையான வேதங்கள் முதலான கலைகள் பலவற்றிலும்

பதித்த சிந்தையோடு - ஒருமுகப்படுத்தப்பட்ட உள்ளத்துடன்

**(குறிப்புரை)** இச் செய்யுள் குளகம். இதில் இடம்பெற்றுள்ள பலவும் என்னும் சொல் அடுத்த பாடலில் உள்ள தெள்ளிமை கொண்டான் என்பதனைக் கொண்டு முடியும்.

*07*

***சுருட்டு இரும்திரை ஏய்ந்து ஒளிர் புயல்நிகர் சொருபக்***
***கிருட்டி ணப்பக வன்சக பாடிஆம் கேண்மை***
***விருத்தி கொண்டுசந் தேகம்ஆ தியஅற விமலக்***
***குருப்பி ரான்உவப்பு எய்திடத் தெள்ளிமை கொண்டான்***

சுருட்டு இரும் திரை ஏய்ந்து ஒளிர் புயல் நிகர் சொருப - சுருளும் தன்மை கொண்டு கரிய அலைகளைப் பொருந்திப் பிரகாசிக்கும் மேகத்தைப் போன்ற வடிவத்தை உடைய

கிருட்டிணப் பகவன் சகபாடி ஆம் கேண்மை விருத்தி கொண்டு - கண்ணபெருமானின் வகுப்புத் தோழனாகும் உறவு வளரப் பெற்று

சந்தேகம் ஆதிய அற - ஐயம் முதலிய கல்விக் குற்றங்கள் நீங்கவும்

விமலக் குருப்பிரான் உவப்பு எய்திட - குற்றமற்ற ஆசிரியராகிய சாந்தீபனி முனிவர்

(மாணவனின் கல்வி வளர்ச்சியைக் கண்டு) மனம் மகிழ்ச்சி கொள்ளவும்

தெள்ளிமை கொண்டான் - தெளிவான அறிவுத் தேர்ச்சியைப் பெற்றார்

(குறிப்புரை) சந்தேகம் ஆதிய என்றது ஐயம் திரிபுகளை. கண்ணனுக்கு உவமானம் ஆகிய மேகத்தை சிறப்பித்துக் கூறி உவமித்ததால் புகழுவமை அணி. 6ஆம் பாடலில் உள்ள பாலகன் எழுவாய்; தெள்ளிமை கொண்டான் பயனிலை.

*08 குருப ரன்களித்து அனுப்பிடும் படிவிடை கொண்டே*
*இருவ ரும்களிப் போடுதம் தம்நகர் எய்ந்தார்;*
*ஒருவன் ஆகிய குசேலன்மா மறைஉச்சி மேய*
*நிரும லப் பொருள் ஆம்அரி பத்திஉள் நிறைந்து*

குருபரன் களித்து அனுப்பிடும் படி - ஆசிரியராகிய சாந்தீபனி முனிவர் மாணவர்களின் கல்வி பயிற்சியால் மகிழ்ச்சியுற்று வீட்டிற்குத் திரும்ப அனுமதி வழுங்குமாறு

இருவரும் விடைகொண்டே - குசேலர், கண்ணன் ஆகிய இருவரும் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு

களிப்போடு தம் தம் நகர் ஏய்ந்தார் - உவகையுடன் தத்தம் ஊருக்குச் சென்றடைந்தனர்

ஒருவன் ஆகிய குசேலன் - இணையற்றவராகிய குசேலர்

மா மறை உச்சி மேய நிருமலப் பொருள் ஆம் அரி பத்தி உள் நிறைந்து - வேதாந்தத்தில் கூறப்பட்டுள்ள தூய பரம்பொருளாகிய திருமாலின் மாட்டுக் கொண்ட பக்தி உள்ளத்தின் கண் நிரம்பி

(குறிப்புரை) இச்செய்யுள் குளகம். நிறைந்து என்னும் வினையெச்சம். அடுத்த பாடலில் உள்ள உவகையுள் தோய்ந்தான் என்பதைக் கொண்டு முடியும். ஒருவன் என்பதற்கு இருவருள் ஒருவராகிய எனக் கூறுவதால் பயனின்மையின் ஒப்பற்றவர் என உரைக்கப்பட்டது.

*09 அகத்து டன்புறம் என்றிடும் பேதம்அற் றவனாய்ச்*
*சகத்து வந்துவம் கழிந்து அரி தாள்உளில் தாபித்து*
*இகத்து மால்அறும் உளத்தனாய்ப் பகலுடன் இரவும்*
*சுகத்து வம்தரு பூசைசெய்து உவகையுள் தோய்ந்தான்*

அகத்துடன் புறம் என்றிடும் பேதம் அற்றவனாய் - உள்ளக்கருத்து வெளிச்செயல் ஆகிய எத்தகைய வேறுபாடும் இல்லாதவராகிய (மனவாக்குக் காயங்கள் ஒன்றுபட்டிருக்க)

சக துவந்துவம் கழிந்து - உலகியலில் உள்ள நன்மை-தீமை, மேல்-கீழ், இன்பம்-துன்பம் எனும் இரட்டைகள் ஒழிய

அரி தாள் உளில் தாபித்து - திருமாலின் திருவடிகளை உள்ளக் கோயிலில்

எழுந்தருளுவித்து (தியானித்து என்றபடி)

இகத்து மால் அறும் உளத்தனாய் - இவ்வுலக இன்பங்களில் விருப்பம் இல்லாத மனதை உடையவராக

சுகத்துவம் தரு பூசை - உயிருக்கு இன்பத்தைத் தரும் வழிபாட்டை

பகலுடன் இரவும் செய்து - பகற்போதிலும் இரவிலும் இடைவிடாமல் இயற்றிக் கொண்டு

உவகையுள் தோய்ந்தான் - மனநிறைவில் ஆழ்ந்திருந்தார்

**(குறிப்புரை)** முன் பாடலில் உள்ள குசேலர் எழுவாய். துவந்துவம் கழிந்தவர் ஆதலின் உவகையுள்தோய்ந்தான் என்பதற்கு மகிழ்ச்சி அடைந்தார் என்னாமல் மனநிறைவு பெற்றார் என உரைக்கப்பட்டது.

10 ***இடும்பை முற்றவும் தரும்கலி வாதைமிக்கு இயலும்***
***குடும்ப வாரியின் மூழ்கினும், குறைவுஇல்அச் சுதன்றன்***
***நெடும்ப தத்துணை பற்றினோர் நிலை கலங் கார் என்***
***றிடும்தி றம்பெறு மொழிஉல கிடைதுலக் கிடவும்***

இடும்பை முற்றவும் தரும் - தீமைகளை முழுமையாக உண்டாக்குகின்ற

கலி வாதை மிக்கு இயலும் - வறுமையின் துன்பம் மிகுந்துள்ளதாகிய

குடும்ப வாரியின் மூழ்கினும் - இல்லற வாழ்வாகிய கடலில் ஆழ்ந்தாலும்

குறைவு இல் அச்சுதன்றன் பதநெடும் துணை பற்றினோர் - எந்தக் குறையும் இல்லாதவராகிய திருமாலின் திருவடிகளாகிய பெரிய ஆதரவை உறுதியாகப் பிடித்துக் கொண்டவர்கள்

நிலை கலங்கார் என்றிடும் - எப்பொழுதும் தம் நிலை குலைந்து மனக்கலக்கம் அடையமாட்டார்கள் என்று கூறப்படும்

திறம்பெறு மொழி - உறுதியான வார்த்தைகளை

உலகிடை துலக்கிடவும் - உலக மக்களுக்கு விளக்குவதற்காகவும்

**(குறிப்புரை)** இப்பாடல் குளகம். துலக்கிடவும் என எண்ணும்மை சேர்ந்த வினையெச்சம் அடுத்த செய்யுளில் உள்ள உன்னிடும் என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிகிறது. நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குறைத் துன்பங்கள் சென்று படும்.(குறள் 1045) ஆதலின் இடும்பை முற்றவும் தரும் கலி வாதை என்றார் குடும்பத்தைக் கடலாக உருவகித்து அடிகளைத் தெப்பமாக உருவகிக்காததால் ஏகதேச உருவக அணி.

11 *தக்க சீர்க்குசே லப்பெயர் பெற்றிடும் தபனன்*
*மிக்க சீர்த்தியாம் கிரணம்எங் கணும்விரித் திடவும்*
*மைக்க வின்புயல் நிகர்அருள் மேனிகொள் மாயன்*
*புக்க பேர் அருள் உளத்திடை உன்னிடும் புணர்ப்பால்*

தக்க சீர் குசேல பெயர் பெற்றிடும் தபனன் - தகுதி வாய்ந்த சிறப்பினை உடைய குசேலர் என வழங்கப்படும் சூரியனின்

மிக்க சீர்த்தி ஆம் கிரணம் - பெருமை மிகுந்த புகழாகிய ஒளிக்கதிர்களை

எங்கணும் விரித்திடவும் - உலகம் எங்கும் பரப்புவதற்கும்

மை கவின் புயல் நிகர் அருள் மேனி கொள் மாயன் - கருமையான அழகினைப் பெற்ற மேகத்தைப் போன்று கைமாறு கருதாது உயிர்களுக்கு அருள்புரிதலையே தன் வடிவமாகக் கொண்ட திருமால்

பேர் அருள் புக்க உளத்திடை மிக்க திருவருட்பண்பு குடிகொண்டுள்ள தம் திருவுள்ளத்தின்கண்

உன்னிடும் புணர்ப்பால் - நினைத்த செயலின் விளைவாக

(குறிப்புரை) இக்கவி குளகம். புணர்ப்பால் எனும் சொல் அடுத்த பாடலில் உள்ள அமைந்தான் என்னும் முற்றைக் கொண்டு முடிகிறது.

12 *கற்பி னில்கதிர்ச் சாலிஒப் பெனஇயல் காந்திப்*
*பொற்பி னில்திரு மகள்எனப் போந்தஓர் பொறுமை*
*வற்பி னில்புவி மகள்என வயங்கும்ஓர் மாதை*
*அற்பி னில்திரு மணம்கொடுஇல் லறத்திடை அமைந்தான்*

கற்பினில் கதிர் சாலி ஒப்பு என - கற்பில் ஒளிமிக்க அருந்ததிக்கு நிகராகவும்

காந்தி இயல் பொற்பினில் திருமகள் என - ஒளி பொருந்திய அழகில் இலட்சுமியைப் போன்றும்

போந்த ஓர் பெருமை வற்பினில் புவிமகள் என - தகுதிவாய்ந்ததும் ஒப்பற்றதும் ஆகிய பொறுமை என்னும் மனத்திண்மையில் நிலமகளை நிகர்த்தும்

வயங்கும் ஓர் மாதை - விளங்குகின்ற பெண் ஒருத்தியை

அற்பினில் திருமணம் கொண்டு - அன்போடு மணந்து கொண்டு

இல்லறத்திடை அமைந்தான் - மனை வாழ்வில் பொருந்தினார்

(குறிப்புரை) துலக்கிடவும் (10) விரித்திடவும் (11) உன்னிடும் புணர்ப்பால் (11) மணங்கொடு அமைந்தான் என்பது பொருள் முடிபு.

13 தனக்குள் வாஞ்சைசற்று இன்றியும் தாரமாச் சமைந்த
புனக்கு யில்திரு மொழிமனை மாதரார் பொருந்து
மனக்கு றிப்புஅடி யே அருள் மாதவன் வரத்தால்
இனக்கு ழாம்கொள்மூ ஒன்பது புதல்வரை ஈந்தான்

தனக்குள் வாஞ்சை சற்று இன்றியும் - தன்பால் காமஇச்சை கொஞ்சமும் இல்லாத போதிலும்

தாரமாச் சமைந்த - தனக்கு மனைவியாக அமைந்த

புன குயில் திரு மொழி மனை மாதரார் - காட்டில் வாழும் குயிலைப் போன்ற இனிய பேச்சினைப் பெற்ற இல்லக் கிழத்தியின்

பொருந்து மன குறிப்பு அடியே - விருப்பதித்தின் காரணத்தாலும்

மாதவன் அருள் வரத்தால் - திருமாலின் தெய்வீக ஈகையாலும்

இன குழாம் கொள் மூஒன்பது புதல்வரை ஈந்தான் - கூட்டமாக இருபத்தேழு மைந்தர்களைப் பெற்றார்

14 சிறுமை உற்றது மேருஎன் திரவியக் குவையோர்
உறுகண் நீங்கஓர் புத்திரன் உதவிடா ஒருவன்
வறுமை வாரிதி மூழ்கிய குசேலமா தவன்பால்
பொறுமை உற்றிடச் சேய்க்குழாம் தரல்புது மையதே.

மேரு சிறுமை உற்றது என் திரவியக் குவையோர் - (தம்மிடம் உள்ள செல்வ மிகுதியால்) மேரு மலையும் சிறியதாகத் தோன்றுமாறு பெரும் பொருள் படைத்த பணக்காரர்களின்

உறுகண் நீங்க - (மக்கட்செல்வம் வாய்க்காத) வருத்தம் ஒழியும் படி

ஓர் புத்திரன் உதவிடா ஒருவன்- ஒரு மைந்னையாவது வழங்காத ஒப்பற்ற கடவுள்

வறுமை வாரிதி மூழ்கிய குசேல மாதவன்பால்-தரித்திரம் ஆகிய கடலில் ஆழ்ந்துள்ளவராகிய குசேலரிடத்தி ல்

பொறுமை உற்றிட - பொறுமைக்குணம் மிகுதியாகும்படி

சேய் குழாம் தரல் புதுமை - அதே குழந்தைக்கூட்டத்தை வழங்கிய தன்மை வியப்பிற்குரியது ஆகும்.

(குறிப்புரை) நல்குரவு நல்லவர்களிடத்தில் பொறுமையை வளர்க்கும் என்பதால் பொறுமை உற்றிட என்றார். வறுமை தீயவர்கள்பால் அழுக்காறு, களவு முதலிய தீய குணங்களை வளர்த்தல் கண்கூடு. புதுமையதே என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. ஏகாரம் ஈற்றசை.

*15* *சலசை தங்குஎழில் துழாய்புனை உரப் பரந் தாமன்*
*குலவு பொன்அடி அல்லது பொருள்எனக் குறியான்*
*உலகில் யாரையும் ஒன்றுஎனக்கு உதவுஎன இரவான்*
*நிலவு கானிடைப் புல்விதை கிள்ளிஇல் நேர்வான்*

சலசை தங்கு எழில் துழாய்புனை உரப் பரந்தாமன் - மலர்மகள் இடங்கொண்டிருப்பதும் அழகிய துளசி மாலை அணியப் பெற்றதுமாகிய மார்பினை உடைய திருமாலின்

பொன் குலவு அடி அல்லது - அழகு விளங்குகின்ற திருவடிகளைத் தவிர

பொருள் எனக்குறியான் - வேறு எதனையும் செல்வமாகக் கருதமாட்டார்

எனக்கு ஒன்று உதவு என - எந்தனக்கு ஒரு பொருளைக் கொடு என்று

உலகில் யாரையும் இரவான் - உலகத்தில் உள்ள யாரிடத்திலும் யாசிக்க மாட்டார்

கானிடை நிலவு புல் விதை கிள்ளி - காட்டில் வளர்ந்துள்ள மூங்கில் மரங்களின் அரிசியைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு

இல் நேர்வான் - வீட்டிற்கு வருவான்.

(குறிப்புரை) இச்செய்யுளில் இடம்பெற்றுள்ள மூன்று வாக்கியங்களுக்கும் குசேலன் என்பது தோன்றா எழுவாய்.

*16* *தனது நாயகன் தினந்தொறும் தந்திடு வதனை*
*மனது உவப்புடன் சமைத்துஅவன் மகிழ்வுற வழங்கி*
*இனம்உ றும்சுத ருடன் அதி திகள் தமக்கு ஈந்து*
*புனலு டன்கலந்து எஞ்சிய தான்புசித்து அமைவாள்.*

தனது நாயகன் தினந்தொறும் தந்திடுவதனை - தன் கணவனால் அன்றாடம் தரப்பெறும் மூங்கில் அரிசியை

மனது உவப்புடன் சமைத்து - உள்ள நிறைவோடு சோறாக்கி

அவன் மகிழ்வுற வழங்கி - அக்கணவன் நிறைவடையும் படி படைத்து

இனம் உறு சுதருடன் - கூட்டமான மைந்தர்களோடு

அதிதிகள் தமக்கு ஈந்து - விருந்தினர்களுக்கும் கொடுத்து

எஞ்சிய புனலுடன் கலந்து - மீதமான சிறதளவு சோற்றைத் தண்ணீர் விட்டுக் கரைத்து

தான்புசித்து அமைவாள் - அவள் குடித்து விட்டு அமைந்திருப்பாள்

(குறிப்புரை) குசேலன் மனையாள் என்பது தோன்றா எழுவாய். தமக்கு என்புழி எண்ணும்மை விரிக்க. சோற்றில் தண்ணீர் ஊற்றாமல், தண்ணீரில் சில பருக்கைகளைப் போட்டுக் குடித்து வந்தாள் என்பதனைப் புனலுடன் கலந்து என விளக்கினார்.

17 *சங்குக் கந்தரம் பெற்றிடும் தாயவள் தரும்ஓர்*
*பங்குக் கஞ்சிகால் வயிற்றுக்கும் பற்றிலாப் பாலர்*
*எங்கு கஞ்சி?அன் னாய்!எனக்கு ஈந்திலை என்ன*
*அங்கு பொய்புகன்று ஏய்த்துமீட் டும்கொடே அயில்வார்*

சங்கு கந்தரம் பெற்றிடும் தாய் அவள் தரும் - சங்கினைப் போன்ற கழுத்தினை உடையவளாகிய அன்னை அளிக்கின்ற

ஓர் பங்குக் கஞ்சி - (தன்னுடைய) ஒரு பாகமாகக் கிடைத்த கஞ்சி

கால் வயிற்றுக்கும் பற்றிலா பாலர்- தம் பசிக்கு நாலில் ஒரு பகுதியும் அடைந்திடப் பெறாதவராகிய அப் பையன்கள்

அன் னாய்! எங்கு கஞ்சி? எனக்கு ஈந்திலை என்ன - பொருள் வெளிப்படை

பொய்புகன்று அங்கு ஏய்த்து - பொய் சொல்லி அப்பொழுது ஏமாற்றி

மீட்டும் கொடே அயில்வார் - மறுபடியும் வாங்கிக் குடிப்பார்கள்

(குறிப்புரை) தாயவள் என்புழி அவள் பகுதிப் பொருள் விகுதி. கொடே என்பதில் ஏகாரம் அசை

18 *சுட்டி அன்னையா னவள்பரி வோடுஒரு சுதனுக்கு*
*ஒட்டி ஈந்திடும் பங்கினை உற்ற அன் னவன்கை*
*தட்டி யேபறித்து உண்டிடும் செயல் கண்டு தம்கை*
*கொட்டி யேசிரித் திடும்சில குழவிகள் அம்மா!*

அன்னையானவள் பரிவோடு சுட்டி - தாய் அன்புடன் குறிப்பிட்டு

ஒரு சுதனுக்கு ஒட்டி ஈந்திடும் பங்கினை - ஒரு மைந்தனுக்குச் சற்று அதிகமாகக் கொடுக்கும் கஞ்சிப் பாகத்தை

உற்ற அன்னவன் கை தட்டி யே பறிந்து உண்டிடும் செயல்கண்டு - (மற்றொரு மகன்) வாங்கிக் கொண்ட அவனுடைய கரங்களிலிருந்து வலிதில் பிடுங்கிக் குடிக்கின்ற செயல்களைப் பார்த்து

சில குழவிகள் தம் கை கொட்டியே சிரித்திடும் - பொருள் வெளிப்படை.

(குறிப்புரை) ஆனவள் பகுதிப் பொருள் விகுதி. அம்மா என்பது இரக்கக் குறிப்புச் சொல்

19 *அணிஇள னச்சில அழுதிடும் அரைபுனைந் திடுவான்*
*துணிஇள னச்சில துயர்ந்திடும் சுடும்கொடும் பசிநோய்*
*தணிஇள னச்சில தளர்ந்திடும் தாங்கரும் கொடிய*
*பிணிஇள னச்சில பேதுறும் பிள்ளைகள் பெரிதும்.*

அணி என சில பிள்ளைகள் பெரிதும் அழுதிடும் - சில குழந்ததைகள் தமக்கு அணிகலன் வேண்டும் எனக் கேட்டு மிகவும் அழும்

அரை புனைந்திடுவான் - இடுப்பில் அணிந்து கொள்வதற்கு

துணி என சில பிள்ளைகள் பெரிதும் துயர்ந்திடும் - துணி வேண்டும் எனக் கேட்டு சில பிள்ளைகள் மிகவும் வருந்தும்

சுடும் கொடும் பசி நோய் தணி என - வாட்டுகின்ற கொடிய பசியைப் போக்கு என்று

சில பிள்ளைகள் பெரிதும் தளர்ந்திடும் - சில குழந்தைகள் மிகவும் தளர்ச்சி அடைவார்கள்

தாங்கரும் கொடிய பிணி என சில பிள்ளைகள் பெரிதும் பேதுறும் - பொறுத்துக்கொள்ள முடியாத கடுமையான நோய் வாட்டுகின்றது என்று சில குழந்தைகள் செய்வதறியாது மிகவும் மயங்கும்.

(குறிப்புரை) ஈற்றில் உள்ள பிள்ளைகள் பெரிதும் என்பதை ஏனைய அடிகளிலும் இணைத்துக் கொள்க; அளைமறி பாப்புப் பொருள் கோள். அழுதிடும், துயர்ந்திடும், தளர்ந்திடும், பேதுறும் என்னும் வினைச்சொல் பொருள்களை ஊன்றி நோக்கி மகிழ்க. துயர்தல் மிக அருகிய வழக்கு.

20 ***அன்னை யே!அயல் வீட்டில்உற் றிடும்சுதர் ஆனார்***
***என்னை அன்னம்நும் அகத்தினில் இத்தினத்து என்றே***
***என்னை நோக்கியே வினவினர்; அவர் இசைத் திடுதல்***
***தன்னை யான்பெற நல்குஎனச் சாற்றுபு தளரும்.***

அன்னையே -

அயல் வீட்டில் உற்றிடும் சுதர் ஆனார் - பக்கத்து வீட்டுப் பிள்ளைகள் என்னை நோக்கி(ஏ) -

இ தினத்து நும் அகத்தினில் என்னை அன்னம் என்று(ஏ) வினவினர் - இன்று உங்கள் வீட்டில் என்ன சாப்பாடு என்று கேட்டார்கள்

அவர் இசைத்திடுதல் தன்னை - (யான் இதுவரையில் அறியாததாக) அவர்கள் ஏதோ ஒரு உணவுப் பண்டத்தைக் கூறுகிறார்களே அதனை

யான்பெற நல்கு என சாற்றுபு - எனக்குக் கொடு எனக் கேட்டு

தளரும் - (கிடைக்காததால்) மனம் வருந்தும்

(குறிப்புரை) இசைத்திடுதல் தன்னை என்புழி தன்பகுதிப் பொருள் விகுதி. என்றே, நோக்கியே ஈரிடங்களிலும் ஏகாரம் அசை. உணவுப் பண்டங்களின் பெயர் கூடத் தெரியாததால், 'அவர் இசைத்திடுதல் தன்னை' என்கிறான். ஒரு மகன் என்பது தோன்றா எழுவாய்.

21 *பெருவ ரைக்குஇணை ஆம்நிதி பெற்றுளார் தமக்கும்*
*அருமை ஓர்சுதன் விருப்பம்ஈந் திடல்அமை யாதேல்*
*இருப தோடுஎழு புத்திரர்ப் பயந்தவர் எய்தும்*
*பருவ ரற்குஇணை கடல்அலாது எதனையே பகர்தல்?*

பெரு வரைக்கு இணைஆம் நிதி பெற்றுளார் தமக்கும் - பெரிய மலை போன்ற செல்வம் படைத்திருப்பவருக்குக் கூட

அருமை ஓர் சுதன் விருப்பம் ஈந்திடல் அமையாதேல் - அருமையாகப் பெற்ற ஒரே ஒரு மகனின் ஆசைகள் எல்லாவற்றையும் நிறைவேற்றிவைத்தல் என்பது இயலாத செயலாயிருக்கையில்

இருபதோடு எழு புத்திரர் பயந்தவர் எய்தும் பருவரற்கு - இருபத்தேழு மக்களைப் பெற்ற பெற்றோர்கள் அடையும் துன்பத்திற்கு

கடல்அலாது எதனை(ஏ) இணை பகர்தல் - சமுத்திரத்ரைத் தவிர வேறு எதை உவமையாகச் சொல்லமுடியும்?

(குறிப்புரை) எதனையும் கூற முடியாது என்பது கருத்து

22 *ஆல காலமும் வடவையம் கனலுமே அனைய*
*கோலம் மேவிய பசித்தழல் தற்கொளுந் திடவும்,*
*பாலர் யாவரும் கூழ்இலர் ஆகியே பதைத்துச்*
*சால வாடுறும் தன்மை ஆங்கு அறிந்தும்,உள் சலிப்பால்*

ஆலகாலமும் வடவையும் கனலுமே அனைய கோலம் மேவிய - ஆலகால நஞ்சும் வடவைத் தீயும் மட்டுமே நிகர்க்கும் தன்மை கொண்ட

பசித்தழல் தற் கொளுந்திடவும் - பசித் தீ (குசேலனின் மனைவி ஆகிய) தன்னை சுட்டெரித்த போதிலும்

பாலர் யாவரும் கூழ் இலர் ஆகி(ஏ) - பிள்ளைகள் அனைவரும் உணவு இல்லாதவர்களாக

பதைத்துச் சால வாடுறும் தன்மை அறிந்தும் - வருந்தி மிகவும் வாட்டமடையும் நிலையைத் தெரிந்திருந்தும்

ஆங்கு உட் சலிப்பால் - அந்தச் சமயத்தில் கூட மனவருத்தத்தால்

(குறிப்புரை) இச் செய்யுள் குளகம். 'உட் சலிப்பால்' என்னும் தொடர் அடுத்த செய்யுளில் உள்ள 'சலிப்பு உளத்தினும் புணராள்' என்பதைக் கொண்டு முடியும். 'கனலுமே' என்பதில் ஏகாரம் பிரிநிலை. 'ஆகியே' என்புழி ஏகாரம் அசை

23 ஒருதி னம்தனில் ஆயினும் இச்செயல் உள்ளில்
கருதி ஓர்மொழி தன்னுடன் கழறிலன் ஆகித்
திருமின் நாயகன் சேவடிக் கேமனம் சேர்த்த
பொருவுஇல் நாயகன் மேல் சலிப்பு உளத்தினும் புணராள்

ஒரு தினம் தனில் ஆயினும் - ஒரு நாளாவது

இச் செயல் உள்ளில் கருதி - (மனைவி, மக்கள் பசியால் வாடுதலாகிய) இச் செய்கையை நினைத்துப்பார்த்து

தன்னுடன் ஓர்மொழி கழறிலன் ஆகி - தன்னோடு ஒரு வார்த்தையும் பேசாதவராக

திருமின் நாயகன் சேவடிக்கே மனம் சேர்த்த - திருமகள் கேள்வனாகிய திருமாலின் செவ்விய திருவடிக் கண்ணேயே உள்ளத்தைப் பதித்து வைத்துக் கொண்டுள்ளவராகிய

பொருவுஇல் நாயகன் மேல் - இணையற்ற கணவனின் மீது

உள்ளத்தினும் சலிப்பு புணராள் - மனத்தளவிலே கூட சினங்கொள்ளவில்லை

(குறிப்புரை) ஒரு தினந்தனிலாயினும் உள் சலிப்பால்(22) நாயகன் மேல் உளத்தினும் சலிப்புப் புணராள் என்பது முடிபு. உள்ளத்திலேயே சலிப்புப் புணராதவள் சொல் செயலில் காட்டவில்லை என்பது வெளிப்படை. தன் வறுமை நிலையினையும் தன்னால் தொழப்படுபவன் திருமின் நாயகன் என்னும் உண்மையும் கூடக் குசேலர் இணைத்துப்பார்கவில்லை என்பது தொனி. பொருவு இல் நாயகன் என்பதின் அடைச்சொல் குசேலர் ஏனைய உலகியல் கணவன்மார்களினின்றும் வேறுபட்டிருந்தமையை உணர்த்துகிறது.

24 நிறையின் வன்மைக்கும் நெஞ்சகத் தின்கணே நிறைவு ஆர்
பொறையின் வன்மைக்கும் புகலும்எப் பொருளையும்
பொறுத்த
தறையின் வன்மையும் தனக்குஇணை ஆம்அருந் ததிமின்
முறையின் வன்மையும் அன்றிஒப்பு ஆரையே மொழிவாம்?

நிறையின்வன்மைக்கும் - (குசேலரின் மனைவியின்) கற்பின் திண்மைக்கும்

நெஞ்சகத்தின் கண்(ஏ) நிறைவு ஆர் பொறையின் வன்மைக்கும் - உள்ளத்தைக் கொண்டு மனதில் திருப்தி அடைவதாகிய பொறுமையின் அசைக்க முடியாத வலிமைக்கும்

எப்பொருளையும் பொறுத்த தறையின் வன்மையும் - எல்லாப் பொருள்களோடு தம்மை அகழ்வாரையும் தாங்கிக் கொள்கின்ற நிலமகளின் பொறையும் ( இது பொருமைக்கு உவமை)

தனக்கு இணை ஆம் அருந்ததி மின் முறையின் வன்மையும் அன்றி - தனக்குத்தானே நிகராகிய (ஒப்பற்ற) அருந்ததியின் கற்பின் திண்மையும் தவிர

ஆரையே ஒப்பு மொழிவாம் - வேறு யாரை இணையாகக் கூறமுடியும்? வேறு யாரும் நிகராகார் என்றவாறு

**(குறிப்புரை)** தரை எனற்பாலது எதுகை நோக்கித் தறை எனப் போலி ஆயிற்று. கற்பு, பொறுமை என இரு பண்புகளை நிறுத்தி இதற்கு உவமையாக அருந்ததி, நிலமகள் என நிறுத்தாமல் முறை மாற்றி நிறுத்தியதால் எதிர் நிரல் நிறையணி

*25 மல்வி ளைத்திடும் தீவினை ஆனவன் பகையால்*
*பல்வி தத்துயர் உழந்திடும் பாலர்கள் தமக்கு*
*நல்வி னைத்திறம் நுகர்ந்திடும் காலம்நண் ணிடலால்*
*செல்வி யாம்அனைக்கு எழுந்ததுஓர் நினைவுசிந் தையினுள்*

மல் விளைத்திடும் - ஓயாத வாழ்க்கைப் போராட்டத்தினை உண்டாக்கிடும்

தீவினை ஆன வன் பகையால் - பாவங்களான வலிமை மிக்க விரோதியால்

பல் வித துயர் உழந்திடும் பாலர்கள் தமக்கு - ஏராளமான துன்பங்களில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த பிள்ளைகளுக்கு

நல் வினை திறம் நுகர்ந்திடும் காலம் நண்ணிடலால் - புண்ணியப் பயன்களைத் துய்ப்பதற்கான நேரம் வந்த காரணத்தால்

செல்வியாம் அனைக்கு - (தன்னளவில் மனக் குறை இல்லாமல்) திருமகளைப் போன்றிருந்த தாய்க்கு

சிந்தையினுள் ஓர் நினைவு எழுந்தது - உள்ளத்தில் ஓர் எண்ணம் உண்டாயிற்று.

**(குறிப்புரை)** குசேலர் பக்தி வயப்பட்டும், அவர் மனைவி கற்பு, பொறுமை ஆகிய பண்புகளாலும் வறுமையைப் பொருட்படுத்தவில்லை என்பதைப் புலப்படுத்த மைந்தர்களின் துன்பத்தை மட்டும் விதந்தோதினார். அன்னையின் உள்ளத்தில் எழுந்த எண்ணத்திற்குக் காரணம் ஒன்றை விதந்து கூறியிருப்பதால் இது ஏதுவணியின்பாற்படும்.

*26 காலம் மற்றுஅதில் குசேலமா தவன்கரத்து அணிந்த*
*நூல்அ விர்ந்திடு களம்பெறு நுண்ணிடை மடவாள்*
*சால வும்கிழிந் துறுபழம் கந்தையைத் தரித்தாள்*
*சீல மாதவன் முன்அணைந்து இன்னன செப்பும்*

காலம் (மற்று) அதில் - அவ்வாறு ஓர் எண்ணம் வந்த அப்போது

குசேலமாதவன் கரத்து அணிந்த நூல் அவிர்ந்திடும் களம் பெறும் - குசேலர் தம் கையால் கட்டிய தாலி விளங்குகின்ற கழுத்தையுடைய

நுண் இடை மடவாள் - சிறுத்த இடுப்பினை உடையவளாகிய மனைவி

சாலவும் கிழிந்துறு பழும் கந்தையை தரித்தாள் - மிகவும் கிழிந்துவிட்ட கந்தற் புடவை ஒன்றை உடுத்தியவளாக

சீலமாதவன்முன் அணைந்து - பக்தி நெறியிற் சிறந்த குசேலனின் முன்னால் சென்று

இன்னன செப்பும் - இவற்றைச் சொல்லலுற்றாள்.

(குறிப்புரை) குசேரலால் கட்டப்பட்டட தாலியை உடையவள் என இங்கு கூறியது தன் மனைவி மக்களின் இன்றியமையாத தேவைகளை நிறைவேற்றும் உலகியற் கடமையை உடையவர் அவர் என்பதனை உணர்த்த. எனவே இது கருத்துடை அடைமொழி அணி. குசேலரின் மனைவி வீட்டில் இருந்த ஓரிரு புடவைகளிலிலும் மிக மோசமானதைப் பொறுக்கி எடுத்து கட்டிக்கொண்டு வந்தாள் என்க. இது வறுமையைக் கணவனுக்குத் தெளிவாக உணர்த்துவதற்கான உத்தி. மற்று அசை. தரித்தாள் உடுத்திக்கொண்டு என முற்றெச்சம்

27 *தஞ்சம் என்றுதற்கு அடைக்கலம் ஆனவர் தம்மை*
*மிஞ்சு அபத்தொழில் இயற்றியா யினும்துயர் மேவாது*
*அஞ்சல் ஈந்துஇரட் சித்தலே அறம்எனத் தாங்கள்*
*செஞ்ச வாய்கொடு செப்பநூ லின்முறை தேர்ந்தேன்*

தஞ்சம் என்று தற்கு அடைக்கலம் ஆனவர்தம்மை - நீயே கதி என்று தம்மைப் புகலாக அடைந்தவர்களை

மிஞ்சு அபத்தொழில் இயற்றியாயினும் - மிக்க இழிவானது அல்லது தீயது எனக் கூறத்தக்க செயல்களைச் செய்தாவது

துயர் மேவாது அஞ்சல் ஈந்து இரட்சித்தலே அறம் - என அவர்களுக்குத் துன்பம் நேராதவாறு அபயமளித்துப் பாதுகாத்தலே தருமம் ஆகும் என்று

தாங்கள் செஞ்ச வாய்கொடு செப்ப - நீங்கள் சிவந்த வாயால் கூற

நூலின் முறை தேர்ந்தேன் - நான் அறத்தாறு இது என அறிந்தேன்.

(குறிப்புரை) நான் தோன்றா எழுவாய். அபம் என்பதற்கு இரட்டுற மொழிதலாக இகழ்ச்சி, பாவம் அகிய இரு பொருட்களும் கொள்ளப்பட்டன. நான் படித்ததில்லை; நீங்கள் சொல்லக் கேட்டுள்ளேன் என்கிறாள். சான்றோன் எனக் கேட்ட தாய் என்னும் தமிழ் மறைப் பகுதிக்குப் பரிமேலழகர் கூறிய உரையைப் போன்றது இது.

28 *இன்ன வாறுயான் உரைத்திடல் யாவும்ஈண்டு எனது*
*நன்ன லம்குறித்து என்றுஉளம் கொள்ளலிர்; நமது*
*மென்ன டைச்சிறார் உற்றவெம் துயரமும் நுமது*
*மின்அ விர்ந்திடு மேனிகொள் மெலிவையும் குறித்தே*

இன்னவாறு யான் உரைத்திடல் யாவும் - இப்படியாக நான் சொல்லுபவை எல்லாம்

ஈண்டு எனது நல் நலம் குறித்து என்று உளம் கொள்ளலிர் - இப்பொழுது என்னுடைய நன்மையைக் கருதி என நினைக்காதீர்கள்

நமது மெல் நடை சிறார் உற்ற வெம் துயரமும் - நம்முடைய குறு நடை மக்கள் படுகின்ற கொடிய துன்பத்தையும்

நுமது மின் அவிர்ந்திடு மேனி கொள் மெலிவையும் - தங்களுடைய ஒளி மிக்க உடலின் இளைப்பையையும்

குறித்தே - கருதியே (இதனைக் கூறுகிறேன்)

**(குறிப்புரை)** மென்னடை சிறார் என்றது தத்தித்தத்தி நடக்கும் இளைய மைந்தர்களோடு, போதிய போஷாப்பு இன்மையால் வலிவற்று மெதுவாக நடக்கும் மூத்த மைந்தர்களையும் உணர்த்தி நின்றது. குசேலர் வறுமையால் மனம் வாடவில்லை; ஆனால் அவர் உடல் இளைத்து விட்டது எனச் சுட்டுகிறாள்.

29 பொற்பு அமைந்துஒளி குலவிய நும்உடல் போதத்
துற்ப லத்தகை அடைந்ததால் ஈதுஉயிர் தோய்ந்து
நிற்பது ஆம்ஒரு நிலைமையை நோக்கிடில் எனக்கே
அற்பு தத்தகை அடைவதுஆ குலம்அகன்று என்ன

பொற்பு அமைந்து ஒளி குலவிய நும் உடல் - அழகும் பிரகாசமும் மிக்க தங்களுடைய மேனி

போதத் துற்பலத்தகை அடைந்ததால் - மிகுந்த வலிமைக் குறைவைப் பெற்றுவிட்ட காரணத்தால்

ஈது உயிர் தோய்ந்து நிற்பது ஆம் ஒரு நிலைமையை நோக்கிடில் - இந்த உடல் உயிரோடிருப்பதாகிய தன்மையைப் பார்க்கும்போது

எனக்கே ஆகுலம் அகன்று - தங்களுடைய மெலிவைக் கருதிக் கவலை கொள்ளவேண்டியவளாகிய என்னிடமே வருத்தம் நீங்கி

அற்புதத்தகை அடைவது - வியப்பு உண்டாகிறது

என்ன - என்று கூற

**(குறிப்புரை)** உம்மைக் காணும் தோறும் கவலைப்படவேண்டிய நானே இந்த உடலில் எப்படி உயிர் நிற்கிறது என வியப்படைகிறேன் என்கிறாள். துர்ப்பலம் எனற்பாலது எதுகை நோக்கித் துற்பலம் என நின்றது. எனக்கே என்புழி நான்கன் உருபு எழன் பொருளில் வந்தது. ஏகாரம் பிரிநிலை.

30 இனைய வாசகம் அமுதமா மழைபொழிந் தென்ன
மனைவி ஓதிடக் கேட்டலும் மாதவக் குசேலன்,
தனைநி கர்த்திடு மாது!நீ சாற்றுதல் சரதம்;
நினைவு மற்றுஇதுஎன் நெஞ்சினும் நேர்வதுஉண்டு உண்டுஆல்

மனைவி இனைய வாசகம் - தன் இல்லாள் இத்தகைய மொழிகளை

அமுதமா மழை பொழிந்தென்ன - அமுதமாரி பெய்ததைப் போல

ஓதிடக் கேட்டலும் - சொல்லச் செவியுற்ற உடனே

மாதவக் குசேலன் -

தனை நிகர்த்திடு மாது - இணையற்ற பெண்ணே!

நீ சாற்றுதல் சரதம் - நீ சொல்வது யாவும் உண்மை

என்நெஞ்சினும் மற்று இது நினைவு நேர்வது உண்டு உண்டு - என் உள்ளத்திலும் இந்த எண்ணம் எழுவது உண்டு

(குறிப்புரை) குசேலர் கூற்று அடுத்த பாடலிலும் தொடரும். மாது அன்மைவிளி இயல்பாயிற்று. மற்று மொழி மாற்றின்கண் வந்தது. உண்டு உண்டு அவலத்தின்கண் வந்த அடுக்கு. ஆல் ஈற்றசை

31 நம்த ரம்தெரிந் தேமிடி கெடப்பொருள் நல்கும்
அந்த ரங்கநண்பு உற்றவர் யாரையும் அறியேன்;
அந்த வாறுஎமக்கு ஈபவர் இருப்பரா னாலும்
எந்த வாறுஎமது அயாசித விரதம்நீத்து இரத்தல்

நம் தரம் தெரிந்தே - நம்முடைய தகுதியை அறிந்து கொண்டு

மிடி கெட - நம் வறுமை முற்றிலும் ஒழியுமாறு

பொருள் நல்கும் - பொருளுதவி செய்யும்

அந்தரங்க நண்பு உற்றவர் யாரையும் அறியேன் - உள்ளார்ந்த நண்பர்கள் எவரும் எனக்கு இல்லை

அந்தவாறு எமக்கு ஈபவர் இருப்பரானாலும் - அப்படிக் கொடுப்பவர் யாராவது இருப்பினும்

எமது அயாசித விரதம் நீத்து இரத்தல் எந்தவாறு - பிறரிடம் எதையும் இரந்து பெற்றுக் கொள்வதில்லை என்னும் என் நோன்பைக் கைவிட்டு விட்டு கேட்பது எப்படி?

(குறிப்புரை) வறுமையின் காரணமாக ஒருவர் ஏற்கத் துணிந்தாலும் தன் கல்வி, ஒழுக்கம், குடும்ப கௌரவம் முதலியவற்றை அறிந்து மரியாதையோடு வழங்கத் தெரிந்தவரிடம் தான் இரக்க வேண்டும். இது தான் வரிசை அறிதல் எனப்படும். ஒரு பணக்காரன் தன்னிடம் தேவைக்கு மேல் உள்ளதில் ஒரு சிறு பகுதியை

மற்றவர்களுக்குக் கொடுப்பது பெரிதல்ல. ஆனால் தக்கவர்களுக்கு வரிசை அறிந்து ஈவதே பாராட்டிற்குரிய வள்ளன்மை. ஏனைய வேறுவகைப்படும்.

அயாசித விரதம் என்பது யாரிடமும் எதனையும் பெற்றுக்கொள்வதில்லை என ஒருவர் தானாக கைக்கொள்ளும் நோன்பு.

*32 காயம் ஈங்கு இது சுகம்பெறும் விதத்தினைக் கருதி*
*மாயம் ஆம்பொருள் நிலைஎன எண்ணியே மயங்கும்*
*தீயர் வாயிலில் போந்துஉளம் திகைப்புறு செயலின்*
*மேய வன்மிடி யால்துயர் படுதல்மேல் மேலே*

ஈங்கு காயம் இது சுகம்பெறும் விதத்தினை கருதி - இவ்வுலகத்தின்கண் நம்முடைய இந்த உடலின்பத்தை நாடி

மாயம் ஆம் பொருள் நிலை என எண்ணி(ஏ) மயங்கும் - அழிந்து போகும் இயல்புள்ள செல்வத்தை நிலையான ஒன்று எனக்கருதி அறிவு கலங்குபவர்களாகிய

தீயர் வாயிலில் போந்து - கெட்டவர்களின் வீட்டு வாசலை அடைந்து

உளம் திகைப்புறு செயலின் - (மானமும் கெட்டு பொருளும் கிட்டாமல்) மனம் தடுமாறி வருந்தும் தொழிலில் ஈடுபடுவதை விட

மேய வன் மிடியால் - தன்பாற் பொருந்திய கொடிய வறுமையால்

துயர்படுதலே மேல் மேல் - வருத்தமடைவதே சிறப்புடையதாகும்.

**(குறிப்புரை)** ஈற்றேகாரத்தை துயர்ப்படுதலோடு இயைக்க. தேற்றேகாரம் மேல் மேல் எனத் துணிவின் கண் அடுக்கி வந்தது.

*33 பரந்த வான் திரை சுருட்டிடு கடல்உடைப் பார்மேல்*
*நிரந்த வாம்தொழில் எவற்றினும் நீசம்உற் றதுதான்*
*கரந்தி டும்பொருட் செல்வர்தம் கடைத்தலை குறுகி*
*இரந்தி டும்தொழில் அல்லது இங்கு ஆய்ந்திடில் எதுவே?*

பரந்தவான் திரைசுருட்டிடு கடல் உடை பார்மேல் - பரப்பளவில் விரிந்ததும், வலிமை மிக்கதும், தன் அலைகளைச் சுருள வைப்பதுமாகிய சமுத்திரத்தை ஆடையாய்க் கொண்டுள்ள இந்த உலகத்தில்

நிரந்த ஆம் தொழில் எவற்றினும் - பலவாக நிறைந்துள்ள பணிகள் எல்லாவற்றிலும்

கரந்திடும் பொருள் செல்வர் தம் கடைத்தலை குறுகி - தம்முடைய செல்வவளத்தை (இரவலர்க்கு அஞ்சி) மறைத்து வைத்துக்கொள்ளும் பொருட் செல்வர் வீட்டுவாசலை அடைந்து

இரந்திடும் தொழில் அல்லது - யாசிப்பதைத் தவிர

நீசம் உற்றது தான் - இழிவினை உடைய தொழில்

ஆய்ந்திடில் இங்கு எது ஏ - யோசிக்குமிடத்து இவ்வுலகில்

வேறு எது உள்ளது? ஒன்றும் இல்லை என்றவாறு

(குறிப்புரை) பொருள் கோளுக்கேற்பச் சொற்கள் கொண்டு கூட்டப்பெற்றன. வான் என்பதற்கு பெருமை மிக்க, எனினும் ஆம் ஏகாரம் ஈற்றசை.

*34* ***மெத்த வேதமா முடிபெற விளம்பும்எப் பொருளும்***
***சித்த மூடுஉணர் தெள்ளிமை படைத்துஉயர்ந் தேற்கு***
***மைத்த நெஞ்சுடைப் பாவியர் ஆயினர் மருவும்***
***அத்த கைத்தொழில் அமைவுஅதோ? அறிவுடைக் கோதாய்!***

அறிவுடைக் கோதாய் - நல்லறிவு வாய்ந்த நங்கையே!

வேத மா முடி பெற விளம்பும் எப்பொருளும் - வேதங்களின் முடிந்த முடிபாகிய ஞான காண்டம் அறிஞர்கள் உணர்ந்து கொள்ளுமாறு உணர்த்தும் எல்லா அறிவுச் செல்வத்தையும்

சித்த மூடு மெத்த உணர் தெள்ளிமை படைத்து - அறிவில் தெளிவாக உணர்கின்ற ஞானவிளக்கம் பெற்று

உயர்ந்தேற்கு - அதனைக் கடைப்பிடித்துத் தகுதியால் உயர்ந்து விளங்கும் எனக்கு

மைத்த நெஞ்சுடை பாவியர் ஆயினர் மருவும் - அறியாமை மிக்க உள்ளத்தைப் பெற்றுள்ள தீவினையாளர்களால் கொள்ளப்படுவதாகிய

அத்தகை தொழில் அமைவுஅதோ - யாசித்தலாகிய அந்த வேலை பொருத்தமானது ஆகுமா? என்ற படி

(குறிப்புரை) மெய்யறிவு படைத்தவர்கள் வறுமையால் வாடினாலும் தரம் தாழ்ந்து இரக்கலாகாது என்னும் கொள்கை பற்றிக் கூறியதன்றி இது தற்பெருமையாகாது. பெருமிதம் பாராட்டிற்குரியது. தற்பெருமையே இழிவானது. குசேலர் தம் மனைவியையும் தமக்கேற்ற அறிவுடையவராகக் கருதுகிறார் என்பது புலனாகிறது. அத்தகைத் தொழில் என்றது நெஞ்சறி சுட்டு.

*35* ***கற்ப கத்தரு ஒத்துஅடி கருதுநர் கருதும்***
***நற்ப யன்கள்யா வையும் உற நல்கும்நா ரணன்நாம்***
***முற்ப வத்துஇயற் றியவினைக்கு இசைந்துஇவண் முடித்தான்;***
***உற்ப லக்கணாய்! தீர்தரில் உதவுவன் உயர்வே.***

உற்பல கணாய் - குவளை மலர்களைப் போன்ற அழகிய விழிகளை உடையவளே!

அடி கருதுநர் கருதும் நற் பயன்கள் யாவையும் உற - தன் திருவடிகளைத் தியானிக்கும் அடியார்கள் தம் உள்ளத்தில் நினைக்கும் நன்மைகள்

எல்லாவற்றையும் பெறும்படி

கற்பகத்தரு ஒத்து நல்கும் நாரணன் - கற்பக மரத்தைப்போல வாரி வழங்கும் திருமால்

நாம் முற்பவத்து இயற்றிய வினைக்கு இசைந்து - நாம் நம் முற்பிறவிகளில் ஆற்றிய நல் வினை தீவினைகளுக்கு ஈடாக

இவண் முடித்தான் - இப்பொழுது இன்ப துன்பங்களை ஏற்படுத்துகிறார்

தீர்தரில் உயர்வு உதவுவன் - தீவினைகளின் நுகர்ச்சி முடிந்த பிறகு நல்வினைப் பயனாகிய இன்பங்களைக் கொடுத்தருளுவார்

**(குறிப்புரை)** பொருள்கோளுக்கு ஏற்பச் சொற்கள் கொண்டு கூட்டப்பட்டுள்ளன. எவரும் கருதுவது நற்பயன்களையே. அவற்றைத் தீவினைப் பயன் தீர்தரில் தருவன் என்க.

*36* *பாவம் முன்புரிந் திட்டதால் இத்துயர் படைத்தேம்;*
*மேவல் உற்றதை நல்தவத் தால்விலக் காதே*
*யாவர் பாலினும் இரந்துஒழிப் பேம்எனில் இடுவார்*
*பாவ மும்செறிந்து எத்துயர் படுத்திடா? பாராய்*

பாவம் முன் புரிந்திட்டதால் இத்துயர் படைத்தேம் - நாம் முன்பிறவியில் செய்த தீவினைகளால் இந்த வறுமைத் துன்பத்தை அடைந்துள்ளோம்;

மேவல் உற்றதை - இவ்வாறு நம்பாற் பொருந்திய தீவினைப்பயனை

நல் தவத்தால் விலக்காதே - நன்மையாகிய தவத்தால் போக்கிக் கொள்ளாமல்

யாவர் பாலினும் இரந்து ஒழிப்பேம் எனில் - யாராக இருந்தாலும் சரி அவர்கள் பால் யாசகம் புரிந்து போக்கிப் கொள்வோம் என முயன்றால்

இடுவார் பாவமும் செறிந்து - (நம்முடைய பழவினைகளோடு) நமக்கு உதவி செய்பவர்களின் தீவினைப் பயனும் சேர்ந்து கொண்டு

எ துயர் படுத்திடா - எத்தகைய துன்பத்தை விளைவிக்காது? துன்பங்களை உண்டாக்கும் என்பது கருத்து

பாராய் - இதனைச் சிந்தித்துப் பார்ப்பாயாக

*37* *மக்க ளாய்உல கத்திடை வந்துளார் ஆர்க்கும்*
*துக்கம் எய்துதல் தொன்மையே! அஃது அறத் தொலைப்பான்*
*மிக்க மாதவம் செய்யுமே லோர்நெறி விடுத்துப்*
*புக்க கீழ்மையோர் தம்தொழில் புரிந்திடப் போமோ?*

உலகத்திடை மக்களாய் வந்துளார் யார்க்கும் - உலகில் மனிதராகப் பிறந்துள்ள அனைவருக்கும்

துக்கம் எய்துதல் தொன்மையே! - ஏதாவது ஒரு துன்பம் உண்டாவது பழமையான ஒன்றுதான்

அஃது அற தொலைப்பான் - அத்துன்பத்தை நீக்கிக் கொள்வதற்காக

மிக்க மாதவம் செய்யும் மேலோர் நெறி விடுத்து - உயர்ந்த தவசிகளின் நன்நெறிகளைக் கடைபிடிக்காமல் விட்டு விட்டு

புக்க கீழ்மையோர் தம் தொழில் புரிந்திடப் போமோ - தீய நெறிகளில் இழிதகையோர்களுக்கே உரிய செயல்களில் ஈடுபடலாகுமோ? ஆகாது என்பது கருத்து.

(குறிப்புரை) அவமானத்தையும் தீமையையும் உணர்ந்தே தீய செயல்களில் ஈடுபடுகின்றனர் என்பதைக் குறிக்கப் புக்க கீழ்மையோர் என்றார். தாமே தேர்ந்தெடுத்து விரும்பிப் புகுந்த தீ நெறியினர் என்பது கருத்து. குசேலரின் சொற்கள் மேலும் தொடர்கின்றன.

38 ஆத லால்தகு நலம்எலாம் அளித்திடும் அனைநேர்
ஈதல் ஆற்றிடாது ஏற்றிடப் புகுவதும் இசைவோ?
சாத லால்படும் துன்பமும் சற்றுஅதுஆம்; அதனால்
போதல் ஆற்றலன்; இரப்பதில் இறப்பது புகழே.

ஆதலால் - மேற்கூறப்பட்ட காரணங்களால்

தகு நலம் எலாம் அளித்திடும் அனை நேர் - தகுதிவாய்ந்த நன்மைகள் எல்லாவற்றையும் வழங்குவதும் தாயை நிகர்த்ததுமாகிய

ஈதல் ஆற்றிடாது - பிறருக்கு கொடுக்கின்ற ஈகையைச் செய்யாமல்

ஏற்றிட புகுவதும் இசைவோ - பிறரிடம் இரப்பதற்காகப் போவதும் பொருத்தம் ஆகுமோ?

சாதலால் படும் துன்பமும் சற்று அது ஆம் - மரண வேதனை கூட யாசகத்தால் நேரும் துன்பத்தை விடக் குறைவானதேயாகும்

அதனால் போதல் ஆற்றலன் - எனவே யாசகம் புரியச் செல்லமாட்டேன்

இரப்பதில் இறப்பதே புகழ் - இரந்துண்டு உயிர் வாழ்வதை விட சாதலே அறம் கூறும் ஆக்கமாகிய புகழைத்தரும்.

(குறிப்புரை) இதுவரை குசேலர் கூற்று.

39 என்று பற்பல விதம்படு நீதிகள் இயம்பும்
குன்று உறழ்ந்திடும் மனம்பெறும் இருந்தவக் குசேலன்
த ன்து ணைப்பதம் மிக்கபேர் அன்புடன் தாழ்ந்து
நன்று உறப்பினும் மனைஒரு வாசகம் நவில்வாள்.

என்று - என்பதாக

பற்பலவிதம்படு நீதிகள் இயம்பும் - பலவகை அறங்களை எடுத்துக்கூறுகின்றவராகிய

குன்று உறழ்ந்திடும் மனம் பெறும் இரும் தவ குசேலன் தன் - மலையைப்போல நிலைபெயராத உறுதிவாய்ந்த உள்ளத்தைப் பெற்ற பெரும் தவசியாகிய குசேலனுடைய

துணை பதம் மிக்க பேர் அன்புடன் தாழ்ந்து - இரண்டு அடிகளையும் மிகுந்த அன்போடு பணிந்து

நன்று உற - தன் கணவனுடைய கருத்துக்களுக்கு மாறுபடாத நன்மை பொருந்தும்படியாக

மனை - குசேலருடைய மனைவி

பினும் ஒரு வாசகம் நவில்லாள் - மேலும் ஒரு சொல்லைச் சொல்வாள்.

**(குறிப்புரை)** நன்று உற என்பதற்குத் தன் மக்களுக்கு நன்மை பொருந்தும்படி என உரைப்பினும் அமையும்.

*40 சேரும் நம்தரம் தெரிந்தவர் செகதலத் திடை ஈண்டு*
*ஆரும் இல்லை என்று எண்ணலிர்; முன்ஓர்ஆ னியத்தில்*
*சாரும் நும்சரித் திரக்குழாம் தன்னில்நும் உயிரில்*
*ஆரும் ஓர்சக பாடிஉற் றுளன்என அறைந்தீர்.*

சேரும் நம் தரம் தெரிந்தவர் - நம்பாற் பொருந்தியுள்ள தகுதியை நன்கு அறிந்துள்ளவர்கள்

ஈண்டு செகதலத்திடை ஆரும் இல்லை என்று எண்ணலிர் - இந்த உலகத்தில் யாருமே இல்லை என நினைக்க வேண்டாம்

சாரும் நும் சரி திர குழாம் தன்னில் - பொருந்தி உமக்கு ஒப்பு ஆகிய நிலையான நண்பர்கள் கூட்டத்தில்

நும் உயிரில் ஆரும் ஓர் சகபாடி உற்றுளன் என - உம் உயிருக்கு இணையான வகுப்புத் தோழர் ஒருவர் இருக்கிறார் என்று

முன் ஓர் ஆனியத்தில் அறைந்தீர் - முன்காலத்தில் ஒருநாள் சொல்லியிருக்கிறீர்கள்.

**(குறிப்புரை)** சரி குழாம் திர குழாம் என்க. ஒப்பானதும் நிலையானதும் ஆகிய நண்பர் கூட்டம். மனைவியின் மாற்றங்கள் தொடர்கின்றன.

*41 நவிலல் மற்றுஅதுஎன் என்றிடில் அவந்திராச் சியத்தில்*
*சவிந லம்கொள்சாந் தீபனி ஆம்அபி தானம்*
*அவிரும் தேசிகன் பால்மறை பயிலும்ஆ னியத்தில்*
*புவிஉ ளார்புகழ்ந் திடும்வசு தேவன்நற் புதல்வன்*

நவிலல் மற்று அது என் என்றிடில் - நான் கூற இருப்பது யாதெனில்

அவந்தி ராச்சியத்தில் - அவந்தி என்னும் பெயர் கொண்ட நாட்டில்

சவி நலம் கொள் - நேர்மையாகிய சிறப்பைக் கொண்டவராகிய

சாந்தீபனி ஆம் அபிதானம் அவிரும் தேசிகன் பால் - சாந்தீபனி எனப் பெயர்பெற்ற குருநாதரிடத்தில்

மறை பயிலும் ஆனியத்தில் - வேதாப்பியாசம் செய்யுங் காலையில்

புவி உளார் புகழ்ந்திடும் வசுதேவன் நற்புதல்வன் - உலகமக்களால் மிகவும் போற்றப்படும் வசுதேவனின் நல்ல மைந்தனாகிய

(குறிப்புரை) மற்று - அசைநிலை

42 கிட்டி ணப்பெயர் அமைந்தஓர் கேள்உளன் அவன்தான்
மட்டி லாதவிற் பத்தியில், புயப்பெரு வலியில்
ஒட்டி உற்றயா வரினும்மிக்கு உயர்ந்தவன் உததி
யுள்தி ளைத்துஉயிர் போனபா லகனைஉய் வித்தே

கிட்டிணப் பெயர் அமைந்த ஓர் கேள் உளன் - கண்ணன் எனப்படும் நண்பன் இருக்கின்றான்

மட்டு இலாத விற்பத்தியில் - எல்லையற்ற கல்வியறிவிலும்

புய பெரு வலியில் - மிகுந்த தோள்வலிமையிலும்

ஒட்டி உற்ற யாவரினும் - என்பாற் பொருந்த உறவாடிய எல்லாரையும்விட

அவன் தான் மிக்கு உயர்ந்தவன் - அந்தக் கண்ணனே மிகவும் மேலானவன்

உததியுள் திளைத்து உயிர் போன பாலகனை உய்வித்தே - கடலுள் மூழ்கி இறந்துவிட்ட குருநாதனின் மைந்தனை மீட்டு உயிர் கொடுத்து

(குறிப்புரை) செய்யுள் குளகமாகத் தொடர்கிறது. பாலகனை உய்வித்த வரலாறு அடுத்த செய்யுளின் உரையில் கூறப்படும்.

43 குருப ரற்குஉறு தெக்கிணை யாம்எனக் கொடுத்தான்
அருளி னால்தனை ஒப்பவன் எதிர்உற அணைவார்
கருதல் ஏவையும் இன்றுஎனாது அளித்திடும் கனவான்
பருவம் ஈங்குஇதில் துவாரகா பதிப்பதி ஆனான்.

குருபரற்கு உறு தெக்கிணையாம் எனக் கொடுத்தான் - தேசிகருக்குப் செலுத்த வேண்டிய காணிக்கையாக என வழங்கினான்

அருளினால் தனை ஒப்பவன் - பிறர் மீது கருணை காட்டுவதில் தனக்குத்தானே நிகரானவன்: இணையற்றவன் என்றபடி

எதிர்உற அணைவார் கருதல் ஏவையும் - தன் எதிரில் வருவபவர்கள் விரும்புவன எல்லாவற்றையும்

இன்றுஎனாது அளித்திடும் கனவான் - இல்லை என்னாமல் கொடுக்கின்ற மாட்சிமையை உடையவன்

பருவம் ஈங்கு இதில் துவாரகாபதி பதி ஆனான் - இந்தத் தருணத்தில் துவாரகை என்னும் நகரத்தின் அரசனாக உள்ளான்.

**(குறிப்புரை)** சாந்தீபனி முனிவரின் மைந்தன் நீராடிக் கொண்டிருந்தபோது சங்கு வடிவம் வாய்ந்த பஞ்சசன் என்னும் அரக்கன் ஒருவன் அவனை கொன்று விட்டான். முனிவரிடம் மாணவனாகக் கல்வி கற்றுக் கொண்டிருந்த கண்ணபெருமான் கடலிற் புகுந்து பஞ்சசனைக் கொன்ற பின்பு யமலோகம் சென்று மாண்ட மைந்தனை மீட்டுக் கொண்டுவந்து குருதட்சணையாகச் சமர்ப்பித்தான்.

***44*** ***என்று அறைந்ததுஈண்டு எனதுஞா பகத்திருந் துளதால்;***
***நன்று அவன்புடை அன்பினால் நண்ணுவீர் ஆயின்***
***மன்ற நம்பெரும் துயர்எலாம் மாற்றிடும் என்னக்***
***கன்றல் இல்மனக் கற்புஉரு ஆயினாள் கழற***

என்று அறைந்தது - எனத் தாங்கள் (அன்றொருநாள்) கூறியது

ஈண்டு எனது ஞாபகத்து இருந்துளது ஆல் - இப்பொழுதும் என் நினைவில் இருக்கிறது

அவன்புடை நன்று அன்பினால் நண்ணுவீராயின் - நீங்கள் அக்கண்ணபெருமானிடம் நல்ல அன்போடு சென்று அடைந்தால்

நம் பெரும் துயர் எலாம் மாற்றிடும் மன்ற - நம்முடைய மிக்க துன்பங்கள் அனைத்தையும் அவர் நீக்கிவிடுவார். இது திண்ணம்.

என்ன - என்று

கன்றல் இல் மன கற்பு உரு ஆயினாள் கழற - சற்றும் நிலைகுலையாத மன உறுதியாகிய கற்பையே வடிவாக உடையவள் கூற

(எண்சீர் விருத்தம்)

45 மனை கிளவி கேட்டு அருள்தோய் குசேலன் சொல்வான்
மற்று அவன்தான் பெரும்செல்வ வளம்மிக்கு ஏய்ந்து,
தனைநிகர் இன்று ஆய்விளங்கும் தன்மை யால், என்
றனதுபெரும் கேண்மைஎலாம் மறந்துஉற் றான்கொல்?
நினைவிடைவைத் துள்ளான்கொல்? எற்றுஆ னாலும்
நேசமுடன் யான்அவனை நேர்போய்க் காண்பான்
புனையிழை! மிக்கு ஆவல்உற்றேன்; அவற்கு நல்குஓர்
பொருள்இலது! வறிது எவணம் போவேன் மாதோ?

மனை கிளவி கேட்டு - இல்லாளின் சொற்களைச் செவிமடுத்து

அருள்தோய் குசேலன் சொல்வான் - கருணைப்பண்பு மிகுந்த குசேலன் கூறத் தொடங்கினார்

(மற்று) அவன் தான் பெரும் செல்வவளம் மிக்கு ஏய்ந்து - கண்ண பெருமான் மிகுந்த பொருள் வளமை எய்தப்பெற்று

தனை நிகர் இன்று ஆய் விளங்கும் தன்மையால் - ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் சிறப்பாக இருப்பதனால்

என்றனது பெரும் கேண்மை எலாம் மறந்து உற்றான் கொல் - என் பெரு நட்பை மறந்து விட்டானோ?

நினைவிடை வைத்துள்ளான் கொல் - நினைவில் வைத்திருக்கிறானோ?

புனை இழை - அணிந்துள்ள நூலாலாகிய தாலியை உடையவளே!

எற்று ஆனாலும் - கண்ணனின் மனநிலை எப்படி இருந்தாலும்

யான் நேர் போய் அவனை நேசமுடன் காண்பான் மிக்கு ஆவல் உற்றேன் - வெளிப்படை

அவற்கு நல்கு ஓர் பொருள் இலது - அவனுக்கு கைபுறையாக அளிப்பதற்கு ஒன்றும் இல்லாமல்

வறிது எவணம் போவேன் - வெறுங் கையுடன் எவ்வாறு போவேன் ?

(குறிப்புரை) புனையிழை என்பது அண்மைவிளி, இயல்பாயிற்று. பொதுவாக இச்சொல்லிற்கு அணிகலன்களை அணிந்தவள் எனப் பொருள் கூறலே மரபு. எனினும் குசேலனின் மனைவி மங்கலப்பூணிலும் பொன் இன்றி நூல் சரட்டை மட்டும் அணிந்திருந்தவள் ஆதலின், "அணிந்துள்ள வெறும் நூலிழைத் தாலியை உடையவள்" என உரைக்கப்பட்டது.

முதலடியில் மற்று பொருள் மாற்றின் கண்வந்தது மாது. ஓ ஈற்றசைகள்

46 "மஞ்சுஅனைய மேனியன்எற் காணில் அன்பால்,
மாந்துபொருள் ஏதுகொடு வந்தாய்? என்பான்
மிஞ்சுஉவகை யோடு அவற்குஏது ஈவேன்? அஃதால்
வீட்டில் உளது ஏதேனும் கொணராய்" என்றான்
உஞ்சவிருத் தியில்கொணர்ந்த நெல்ஈர் நாழி
ஒப்புஇல் சுவை அவலாச் செய்து உதவ லோடும்
"புஞ்சம்உற யான் எதனில் பொதிந்து கொண்டு
போவன்?" என மனைவியொடு புகன்றான் அன்றே

மஞ்சு அனைய மேனியன் எற் காணில் - மேகம் போன்ற திருமேனியை உடைய கண்ணபெருமான் என்னைப் பார்த்தால்

அன்பால் மாந்துபொருள் ஏது கொடுவந்தாய் உள்ளன்பினால். "என்ன திண்பண்டம் கொணர்ந்தாய்" எனக் கேட்பான்.

மிஞ்சு உவகையோடு அவற்கு ஏது ஈவேன் - மிகுந்த மகிழ்ச்சியுடன் அவருக்கு நான் எதனைக் கொடுக்க வல்லேன்?

என்றான் -- என்று குசேலர் கூறினார்

உஞ்சவிருத்தியில் கொணர்ந்த ஈர் நாழி நெல் - குசேலர் பிக்ஷையாகப் பெற்று வந்த அரைப்படி நெல்லை

ஒப்பு இல் சுவை அவலாச் செய்து உதவலோடும் - மனைவி சுவைமிக்க அவலாகத் தயாரித்துக் கொடுத்த உடனே

யான் எதனில் புஞ்சம் உற பொதிந்து கொண்டு போவன்? என -"இந்த அவலை எதில் சேர்த்துக் கட்டி எடுத்துக் கொண்டு போவது என்று"

மனைவியோடு புகன்றான் - இல்லக் கிழத்தியிடம் கூறினான்

அரைப்படி அவலை எடுத்துக்கொண்டு போக வாய்ப்பாக அவர் வீட்டில் ஒன்றுமே இல்லை என்பது கருத்து.

(குறிப்புரை) உஞ்ச விருத்தி - இது ஒரு வகை நோன்பு. இரப்பவர் நடுத்தெருவில் இறைவன் நாமங்களைக் கூறிக் கொண்டு செல்வர். யாரிடமும் ஒன்றும் கேட்க மாட்டார்கள். ஒரு நாளைக்கு குறிப்பிட்ட ஒரு தெருவில் மட்டுமே செல்வர். தானியம், பணம் முதலியவற்றை வழங்குவோர் தாமே வலிய வந்து தந்தால் மட்டுமே பெற்றுக் கொள்வர். முற்காலத்தில் பெரும்பாலான அந்தண இல்லறத் தவசிகள் உஞ்ச விருத்தி என்னும் இவ்வகையையே வாழ்க்கைத் தேவைகளுக்கு ஏற்றிருந்தனர்.

அன்று ஏ ஈற்றசை.

47 தோன்றும் அகங் கைஅளவு கிழியாது உற்ற
துணி ஒன்று கிடைப்பதும்துல் லபத்தது ஆக
நான்றுஉளதோ ரணம்போன்ற உடையி னூடுஓர்
நல்கை அள வேதுளை நண் ணாமை நோக்கி
ஆன்றமகிழ்வு அடைந்தவளாய் அதனில் கட்டி
அருந்தவன்தாள் பணிந்து மகிழ்ந்து அனுப்ப லோடும்
ஊன்றுகோல் கொடுபிறைபோல் வளைந்த தன்ஓர்
உடல்வருத்த துவாரகை மாட்டு உற்றான் அன்றே.

தோன்றும் அகங்கை அளவு கிழியாது உற்ற - உள்ளங்கை அகலத்திற்காவது கிழிசல் இல்லாத

துணி ஒன்று கிடைப்பதும் துல்லபத்தது ஆக - ஒரு துண்டுத்துணி கிடைப்பதும் கூட அரியதாய் இருந்ததால்

நான்றுள தோரணம் போன்ற உடையினூடு - தொங்கிக்கொண்டு இருக்கின்ற தோரணத்தைப் போன்று இருந்த வேட்டியில்

ஓர் நல் கை அளவே துளை நண்ணாமை நோக்கி - ஒரு கையளவுப் பகுதியே ஓட்டை இல்லாமல் இருந்ததைப் பார்த்து

ஆன்ற மகிழ்வு அடைந்தவளாய் - மனைவி மிக்க உவகையோடு

அதனில் கட்டி - அக்கிழியாத துணிப்பகுதியில் அவலை மூட்டையாகப் பொதிந்து

அரும்தவன் தாள் பணிந்து - கணவனின் அடிகளில் விழுந்து வணங்கி

மகிழ்ந்து அனுப்பலோடும் - இனித் தன் மக்களின் துன்பம் எல்லாம் நீங்கி விடும் என்னும் மன நிறைவோடு விடையளிக்க

பிறைபோல் வளைந்த தன் ஓர் உடல் வருந்த - பிறை நிலவைப் போல் கூனல் விழுந்த தன் உடம்பு பயணத்தால் துயரடையுமாறு

ஊன்றுகோல் கொடு - கைத்தடியைத் துணையாகக் கொண்டு

துவாரகை மாட்டு உற்றான் - துவாரகையை நோக்கிச் செல்லத் தொடங்கினார்.

(குறிப்புரை) சுதாமா என்னும் இயற் பெயர் வாய்ந்தவராகிய இந்த வரலாற்று நாயகருக்கு குசேலர் எனப் பெயர் வந்த காரணம் இதில் நன்கு விளக்கப்படுகிறது. குசேலர் என்னும் சொல் மிகக் கிழிந்த ஆடையை அணிந்தவர் எனப் பொருள் படும்

அன்று, ஏ ஈற்றசை

48 அணிநீடு துவாரகைப்பால் அளக்கொண் ணாவா
அமைந்துளவீ திகள்தோறும் அமரர் நச்சும்
மணிமாட மாளிகைகள் நிறைந்த சீரை
மறைமுனிஆம் குசேலன் உளம் மதித்து நோக்கி
பணிநீடி ஒன்றுஎனவே பலவும் ஓங்கும்
பான்மையினால் ஈண்டு எவ்வில் பாங்கே யான்உள்
துணிவோடும் செல்வன்? ஒவோர் வாயின் மாடும்
துவாரபா லகர்காவல் துதைகின் றார். ஆல்

அணிநீடு துவாரகை பால் - அழகு மிகுந்த துவாரகை நகரில்

அளக்க ஒண்ணாவா அமைந்துள - இத்தனை என எண்ணி முடிக்க இயலாதவாறு மிகுந்துள்ள

வீதிகள் தோறும் - தெருக்கள் எல்லாவற்றிலும்

அமரர் மெச்சும் மணி மாட மாளிகைகள் நிறைந்த சீரை - தேவர்களும் பார்த்துப் பாராட்டும் அழகிய மாளிகைகள் நிறைந்துள்ள சிறப்பை

மறைமுனி ஆம் குசேலன் உளம் மதித்து நோக்கி - வேதங்களை உணர்ந்த முனிவராகிய குசேலர் தம் மனதில் அளவிட்டுப் பார்த்து

பணிநீடி - (கட்டிடக் கலையின்) கைவினைச் சிறப்பு மிகுந்து

பலவும் ஒன்று எனவே ஓங்கும் பான்மையினால் - பல வீடுகளும் ஒன்று போலவே சிறந்து விளங்குவதால்

ஈண்டு எ இல் பாங்கே யான் உள் துணிவோடும் செல்வன் - இவ்வூரில் எந்த வீட்டிற்குள் நான் துணிந்து நுழைய முடியும்?

ஒவோர் வாயில் மாடும் - ஒவ்வொரு மாளிகை வாசலிலும்

துவாரபாலகர் காவல் துதைகின்றார் - வாயிற் காவலர்கள்கள் பாதுகாப்பில் கவனமாக ஈடுபட்டுள்ளனரே

**(குறிப்புரை)** அமரர் என்புழி உயர்வு சிறப்பும்மை விரிக்க. ஆல் அசை

49 எவ்வணம்யான் இவற்றைஎலாம் கடந்திட்டு அப்பால்
இயன்றகிருட் டிணன் சேவை எய்தல் என்றே
செவ்வணம்சால் முனிவன்உளத்து எண்ணி எண்ணி
சென்றனன்அப் பால்இறைவன் சேர்இல் சேர்கால்
இவ்வணம்என்று ஓதரும்தேசு உடையர் ஆகி
ஏய்ந்துளபா லகர்இருவர் இயல்பு நோக்கி
மெய்வணங்கள் வினவவும்உள் அச்சம் கொண்டு
மேவினன்அன் னோர்களிடம் மெலிந்து மாதோ

எவணம்யான் இவற்றை எல்லாம் கடந்திட்டு - வெளிப்படை

அப்பால் இயன்ற கிருட்டிணன் சேவை - இவற்றை தாண்டியிருக்கின்ற கண்ண பெருமானின் தரிசனத்தை

எய்தல் என்றே - அடைவேன் என

செ வணம் சால் முனிவன் - சிறப்பு மிகுந்த தவசியாகிய குசேலர்

உளத்து எண்ணி எண்ணி சென்றனன் - வெளிப்படை

அப் பால் இறைவன் சேர் இல் சேர்கால் - பிறகு அரண்மனையை அடைந்த போது

இவணம் என்று ஓதரும் தேசு உடையர் ஆகி - இத்தனை என அளக்கமுடியாத பெருமையைப் பெற்றவர்களாகி

ஏய்ந்துள பாலகர் இருவர் இயல்பு நோக்கி - பொருந்தியிருக்கும் இரு வாயிற்காவலர்களின் தன்மையைப் பார்த்து

மெய் வணங்கள் வினவவும் - இதுதான் அரண்மனையா என்னும் உண்மையை விசாரிப்பதற்குக் கூட

உள் அச்சம் கொண்டு - தன் மனதில் பயந்தவராக

அன்னோர்களிடம் மெலிந்து மேவினன் - அவர்களை நோக்கி மெதுவாகச் சென்றார்.

(குறிப்புரை) எவ்வணம் முதலிய அடி முதல் சீர்களுக்கு மெய்வணம் என்பது ஆசெதுகை. இந்நூலாசிரியர் செய்யுள்களில் இத்தகைய தொடை வகைகள் மிக மிக அருகியே காணப்படும்.

இச்செய்யுளில் மிகப்பெரிய செல்வரின் வாயிலில் நிற்கும் ஒரு மிகப்பெரும் வறியவனின் நிலை மிகச் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

மாது ஓ ஈற்றசை.

50 மற்று அதுகால் துவாரம்மிசை உற்றோர் முன்னம்
மருவுதரித் திரத்தொடுவார்த் திகனாம் மெத்த
இற்ற துணிக் கந்தையினை இடையில் சுற்றி
இரைந்தஉயிர்ப் புடன்இளைத்துற் றோனை நோக்கி
மற்றுஇவன்ஒப்பு ஆகிடும்ஓர் மனிதன் றானும்
வளம்பெறும்நம் துவாரகையின் மாட்டு உள்ளானோ?
உற்றனனேல் மிக்க இறும் பூதே ஆகும்;
உவனைஒப்பார் அந்தணர்க ளுள்இன்று இன்றே

மற்று அது கால் துவாரம் மிசை உற்றோர் - அப்போது வாயிலில் இருந்தவர்கள்

முன்னம் மருவு - தமக்கு எதிரே வந்தடைந்த

தரித்திரத்தொடு வார்த்திகனா - வறுமையும் முதுமையும் உடையவனாக

மெத்த இற்ற துணிக்கந்தையினை இடையில் சுற்றி - மிகவும் நைத்துபோன கந்தைத்துணியை இடுப்பில் பேருக்குச் சுற்றிக் கொண்டு

இரைந்த உயிர்ப்புடன் இளைத்து உற்றோனை நோக்கி - பெருமூச்சுடன் மிகவும் களைத்துப் போனவராக வந்துள்ள குசேலரைப் பார்த்து

மற்று இவன் ஒப்பு ஆகிடும் ஓர் மனிதன்றானும் - இவனைப் போன்ற ஒரு மானிடனும்

வளம்பெறும் நம் துவாரகையின் மாட்டு உள்ளானோ - செழிப்புமிக்க நம்முடைய துவாரகைப் பதியில் இருக்கிறானா?

உற்றனனேல் - அப்படி ஒருவன் இருப்பானேயாகில்

மிக்க இறும்பூதே ஆகும் - அது மிகவும் வியப்பான ஒன்றே ஆகும்

அந்தணர்களுள் இவனை ஒப்பார் இன்று இன்று ஏ - வேதியர்களுக்குள் இவரைப் போன்ற ஒருவர் உறுதியாக இருக்கவே மாட்டார்கள்

(குறிப்புரை) வேட்டி உடுத்திக் கொள்ளுமளவு போதுமானதாக இல்லாத படியால் சுற்றி என்றார்.

51 *ஏதுஎவணம் ஆயினும்ஆ குகஎன்று ஆயாது*
*யாம் இருத்தல் நம்தகுதிக்கு ஏலாது என்று, அம்*
*மாதவனைப் பார்த்து, "உனது பதிப்பேர் யாது?*
*வந்தது எவன்? நின் உளத்தின் வாஞ்சை யாது?*
*ஓது"கெனப் பரிவோடும் கேட்ட காலை*
*ஓங்குதவக் குசேலன்உளத்து உன்னு கின்றான்*
*"மாதவன் உள் பொருட் செருக்குஉற் றில்லான் என்கை*
*வாயில்கா வலர்மதியால் வயங்கிற்று "அன்றே*

ஏது எவணம் ஆயினும் ஆகுக என்று - எது எப்படியோ போகட்டும் என

யாம் ஆயாது இருத்தல் - நாம் (இப்பெரியவரைப் பற்றி) விசாரித்துத் தெரிந்துகொள்ளாமல் சும்மா இருப்பது

நம் தகுதிக்கு ஏலாது என்று - பாதுகாப்புப் பணியில் உள்ள நம்முடைய பொறுப்புக்குப் பொருத்தமானது ஆகாது என நினைத்து

அ மாதவனைப் பார்த்து - குசேலரை நோக்கி

உனது பதி பேர் யாது - உமது ஊரின் பெயர் என்ன,

வந்தது எவன் - இங்கு வந்திருப்பது எதற்காக

நின் உளத்தின் வாஞ்சை யாது ஓதுக - உமது விருப்பம் என்ன என்பதை சொல்லுங்கள்

எனப் பரிவோடும் கேட்ட காலை - என்று அன்புடன் கேட்ட போது

ஓங்கு தவக் குசேலன் - உயர்ந்த தவத்தையுடைய குசேலர்

உளத்து உன்னுகின்றான் - தம் மனதில் பின்வருமாறு நினைத்துக்கொண்டார்

மாதவன் உள் பொருட் செருக்கு உற்றில்லான் என் கை - கண்ணபெருமான் தன்மனத்தில் செல்வச் செருக்கு உடையவனாக இல்லை என்பது

வாயில் காவலர் மதியால் வயங்கிற்று - பாதுகாவலர்களின் அறிவார்ந்த செயலால் விளக்கமுறுகிறது.

(குறிப்புரை) தொண்டர்களைக் கண்டு தலைவர்களின் தகுதியை உணரலாம். ஆதலின் குசேலர் இவ்வாறு எண்ணினார்

அன்று ஏ ஈற்றசை

52 என்னவியந்து அண்ணவர்பால் தன்விர்த் தாந்தம்
இசைத்திடுவான் "குசேலன் என்பார் எனது நாமம்;
கின்னம் இல்சீர் அயற்பதியில் வாழ்வேன்; என்றன்
கேண்மைகொள்கிட் டிணன்சேவை கிடைப்பான் வந்தேன்;
இன்னதுஅலால் பின்நசைஒன்று இல்லேன்; கண்டீர்;"
என்றஉடன் "ஏது அவத்தை ஈது? என்று ஓதிப்
பன்னரும்விம் மிதர்ஆகிப் பரந்தா மன்றான்
பயில் விளையாட்டு ஆர் அளவுஉட் பட்டது?" என்னா

என்ன வியந்து - என்று இறும்பூதெய்தி

தன் விர்த்தாந்தம் அன்னவர்பால் இசைத்திடுவான் - தம் வரலாற்றை அக்காவலர்களிடம் சொல்லத் தொடங்கினார்

எனது நாமம் குசேலன் என்பார் - என்னை ஊரார் குசேலன் என அழைப்பார்கள்

கின்னம் இல் சீர் அயற் பதியில் வாழ்குவன் - துன்பம் இல்லாச் சிறப்பினைப் பெறறதாகிய பக்கத்து ஊரில் வசிக்கிறேன்

என்றன் கேண்மை கொள் கிட்டிணன் சேவை கிடைப்பான் வந்தேன் - என் நட்பினைப் பெற்றுள்ள கண்ணபெருமானைப் பார்த்துவிட்டுப் போக வந்திருக்கிறேன்

இன்னது அலால் - இதனைத் தவிர

பின் நசை ஒன்று இல்லேன் கண்டீர் - வேறு ஆசை எதுவும் இல்லை என்பதை அறிந்து கொள்வீர்களாக

என்ற உடன் - குசேலர் இவ்வாறு கூறிய உடனே

ஏது அவத்தை ஈ.து என்று ஓதி - (வாயிற்காவலர்கள்) இது நமக்கு "எத்தகைய சங்கடமான நிலைமை" என்று சொல்லிக் கொண்டு

பன்னரும் விம்மிதராகி - சொல்லுக்கடங்காதபடி வியப்படைந்தவர்களாகி

பரந்தாமன்றான் பயில் விளையாட்டு - எம் பெருமானின் திருவிளையாடலை

யார் அளவுள் பட்டது என்னா - யார் சிந்தித்து அறிய முடியும் என நினைத்து

**(குறிப்புரை)** குசேலர் தம் ஊரைத் துன்பம் இல்லாதது என்றது மனங் கொள்ளத்தக்கது. இது இருவகையில் பொருள் படும். என்னுடைய சிற்றூர் உம் பேரூரைப் போல ஆடம்பர வசதிகள் மிக்கதாக இல்லாத போதும் மனத்துன்பத்திற்கு இடம் இல்லாத எளிமையான தேவைகளைப் பெற்றுள்ள ஊர் என்பது ஒரு கருத்து. மற்றொன்று குசேலர் மன நிலை பற்றியது. அவர் தம் வைராக்கியத்தால் பொருட் செல்வத்தைத் துன்பம் தருவது எனக் கருதுபவர். எனவே துன்பத்திற்கு அடிப்படைக் காரணமாகிய பெருஞ் செல்வம் தம் ஊரில் இல்லை என்கிறார். தன்னுடைய ஏழ்மைக் கோலத்தைக் கண்டு ஏதோ இரவலனாக வந்ததாக எண்ணிவிடக் கூடாது என்பதற்காக நசை ஒன்று இல்லேன் என்கிறார். இது உண்மையான வார்த்தை. அவருக்கு எதிலும் ஆசை இல்லை தான்

குசேலரின் சொற்களைக் கேட்ட வாயிற் காவலர்களுக்கு அவற்றை நம்பவும் முடியவில்லை; நம்பாமலும் இருக்க முடியவில்லை. எனவே நம்பாடு அவஸ்தை ஆகிவிட்டது என்கிறார். பரம ஏழை பெருமிதம் உடையவராக விளங்குவது பகவானின் திருவிளையாடலாக இருக்கலாம் என வாயிற் காலவர்கள் சரியாக ஊகித்துவிடுகின்றனர்.

இவ்விருத்தம் கதை மாந்தர்களை செம்மையாகப் படைத்துக் காட்டப்பெற்ற நாடக நுட்பம் மிக்க செய்யுள் ஆகும்.

53 *தீனர்களை அகதிகளைக் காணில் எந்தை*
*திருஉள்ளத்து இரக்கம்மிக செனிப்பது அன்றோ*
*ஆனசெயல்? ஏதுஎனினும் ஆக; யாம் போய்*
*அரி சமுகத்து இச்செயலை அறிக்கை செய்வாம்;*
*கோன் "நலிந்தோர்க் காணில் அரைக் கணத்துஅன் னோரைக்*
*கொணருதிர்; தா மதம் செயக் கூ டாது" என்று ஆணை*
*வேன் அமைய இட்டுளதால், செல்வாய் என்றுஓர்*
*விருத்தனைஓ திடவிரைவில் விடுத்தார் அன்றே*

தீனர்களை அகதிகளைக் காணில் - எளியவர்களையும் புகலிடமற்றவர்களையும் பார்த்தால்

எந்தை திருவுள்ளத்து - எம்பெருமானாகிய கண்ண பிரானின் தெய்வீகமான மனத்தின் கண்

இரக்கம் மிக செனிப்பது ஆன செயல் - கருணை மிகுதியாகத் தோன்றுவது தீர்மானமான ஒரு காரியம் ஆகும்

ஏது எனினும் ஆக - (குசேலரின் சொற்கள்) உண்மையோ அல்லவோ எப்படியாவது இருக்கட்டும்

யாம் போய் - நாம் உள்ளே சென்று

அரி சமுகத்து - கண்ண பெருமானின் திருமுன்பு

இ செயலை அறிக்கை செய்வாம் - இவர் வருகையாகிய செய்தியைத் தெரிவித்து விடுவோம்

நலிந்தோர்க் காணில் - துன்பப்படுபவர்களை வாயிலில் பார்த்தால்

அரைக் கணத்து அன்னோரை கொணருதிர் - மிக விரைவில் அவர்களை என்பால் அழைத்து வாருங்கள்

தாமதம் செயக் கூடாது என்று - காலந்தாழ்த்தலாகாது என

வேன் அமைய - மிக்க முதன்மையுடையதாக

கோன் ஆணை இட்டுளதால் - அரசர் உத்தரவு போட்டிருப்பதால்

ஓர் விருத்தனை - (வாயிலில் இருந்த) ஒரு காவல் அதிகாரியை

"ஓதிட விரைவில் செல்வாய்" என்று - இந்நிகழ்ச்சிகளை அரசருக்குத் தெரிவிக்கச் சீக்கிரமாகப் போவாயாக எனக் கூறி

விடுத்தார் அன்று ஏ - உள்ளே அனுப்பினார்கள்

(குறிப்புரை) விருத் தன் அதிகாரி; இனி பிருந்தியன் என்னும் வடசொல்லின் தமிழ் வடிவாகக் கொண்டு ஏவலாள் எனினுமாம்.

54 சென்றவன்றான் "மகராச! போற்றி!" என்னத்
தெண்டன்இட்டுக் கைத்துணைகள் சிரமேல் கூப்பி
நின்று அறைவான் "பிரபோ!" ஓர் மறையோன் வாயில்
நேர்முகப்பு உற்றுள்ளான்; வார்த் திகத்தி னோடு
மன்ற மிடி யனும் ஆனான்; வினவில் என்ஆன்
மா நிகர்கிட் டிணர்க்காண வந்தேன் என்றான்;
நன்று அமையும் குசேலனாம்; சமுகம் எய்தும்
நகையினொடு விடைவேண்டி நண்ணு கின்றான்.

சென்றவன்றான் - உள்ளே போன அதிகாரி

மகராச! போற்றி! என்னத் தெண்டனிட்டு - அரசனை வாழ்த்தி வணங்கி

கைத் துணைகள் சிரமேல் கூப்பி நின்று - இரு கரங்களையும் தலைக்கு மேலே உயர்த்திக் கும்பிட்டவாறு நின்றுகொண்டு

அறைவான் - சொல்லத் தொடங்கினான்

பிரபோ - மன்னவரே!

ஓர் மறையோன் வாயில் நேர்முகப்பு உற்றுள்ளான் - ஓர் அந்தணர் அரண்மனை வாயிலுக்கு வந்துள்ளார்

வார்த்திகத்தினோடு மன்ற மிடியனும் ஆனான் - முதுமையோடு மிக்க வறுமையும் உடையவராக இருக்கிறார்

வினவில் - அவரிடம் விசாரித்த போது

என்ஆன்மா நிகர் கிட்டிணற்காண வந்தேன் என்றான் - என்னுடைய உயிரனைய கண்ணனைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறேன் என்றான்

நன்று அமையும் - அவருடைய சொற்கள் வாய்மையாகத் தோன்றுகின்றன

குசேலனாம் - அவர் பெயர் குசேலன் எனக் கூறினான்

சமுகம் எய்து நசையினொடு - தங்களைத் தரிசிக்க வேண்டும் என்னும் விருப்பத்தோடு

விடை வேண்டி - அனுமதியை எதிர்பார்த்துக் கொண்டு

நண்ணுகின்றான் - காத்திருக்கின்றார்.

**(குறிப்புரை)** சென்றவன் வினையாலணையும் பெயர். தான் பகுதிப் பொருள்விகுதி

(அறுசீர் விருத்தம்)

55 *என்றிடும் மாற்றம் தூதன்*
*இசைத்திடும் எல்லை தன்னில்*
*மின்திகழ் உருப்பி ணித்தாய்*
*வியன்கழற் புறத்தின் மேவித்*
*தன்திருக் கரம்கொண்டு அன்பால்*
*தைவரப் பள்ளி மீதில்*
*நன்று அரை விழிகள் சாத்தி*
*ஞானநித் திரைகொண் டுற்றான்*

என்றிடும் மாற்றம் தூதன் இசைத்திடும் எல்லை தன்னில் - என்னும் சொற்களைச் செய்தி கொண்டு வந்தவன் சொல்லும் போது

மின்திகழ் உருப்பிணித்தாய் வியன் கழல் புறத்தின் மேவி - மின்னலைப் போன்று ஒளி மிகுந்த ருக்குமணி தேவி பெருமை மிக்க திருவடிகளுக்க அருகே இருந்து கொண்டு

அன்பால் தன் திருக்கரம் கொண்டு தைவர - காதலோடு தன் கைகளால் கால்களைப்பிடித்துவிட்டுக் கொண்டிருக்க

பள்ளி மீதில் - படுக்கையில்

நன்று அரை விழிகள் சாத்தி - அழகாகப் பாதிக் கண்களை மூடிக் கொண்டு

ஞான நித்திரைகொண்டுற்றான் - அறிதுயிலிலிருந்தார்.

(குறிப்புரை) கண்ணபிரான் தோன்றா எழுவாய்

56 ஓதுபேர் கேட்ட லோடும்
ஒல்என அஞ்ச தூளி
மீதுநின்று எழுந்துஎங்கு எங்குஎன்
வேட்கைசால் குசேலன் என்னப்
போதுஉறழ் துணைப்பொற் பாதம்
பூத்தொடப் பொருக்கென்று எய்திப்
போதுறு குசேலற் கண்டான்;
பொருவிலா உவகை மிக்கான்

ஓது பேர் கேட்டலோடும் - தூதானால் குசேலன் என்று சொல்லப்பட்ட பெயரைச் செவி மடுத்த உடனே

ஒல் என அஞ்ச தூளி மீது நின்று எழுந்து - விரைவாகக் கட்டிலில் இருந்து எழுந்து

என் வேட்கைசால் குசேலன் எங்கு எங்கு என்ன - என் அன்பிற்கு உரிய குசேலர் எங்கே எங்கே என்று கேட்டுக் கொண்டு

போது உறழ் துணைப் பொற்பாதம் பூத்தொட - தாமரை போன்ற இரண்டு திருவடிகளும் நிலத்தைத் தீண்டுமாறு

பொருக்கென்று எய்தி - வேகமாகச் சென்று

போதுறு குசேலற் கண்டான் - தன்னை நாடிப் புறப்பட்டவராகிய குசேலரைப் பார்த்தார்

பொரு இலா உவகை மிக்கான் - இணையற்ற மகிழ்ச்சி கொண்டார்.

(குறிப்புரை) ஒல் என, பொருக்கென்று இரண்டும் விரைவுக் குறிப்பு. போது உறழ் பாதம் பூதொட என்றது ஒரு நயம்

57 கரை அறும் அன்போடு ஆலிங்
கனம் புரிந்து அத்தம் தன்னால்
புரையில்கைப் பிடித்திட்டு அந்தப்
புரத்துஉறக் கொண்டு போந்து
நிறைமணி இமைக்கும் சிங்கா
தனத்தில்நீடு அன்பின் ஏற்றித்
தரைபுகழ் குசேலன் செம்பொன்
தாள்த்துணை விளக்கப் புக்கான்

கரை அறும் அன்போடு ஆலிங்கனம் புரிந்து - எல்லையற்ற அன்போடு கட்டித்தழுவி

அத்தம் தன்னால் புரையில் கை பிடித்திட்டு - தன் கையால் குசேலரின் குற்றமற்ற கையைப் பற்றிக் கொண்டு

அந்தப்புரத்து உறக் கொண்டு போந்து - அரண்மனையின் வாழ்விடப் பகுதிக்கு அழைத்துச் சென்று

நிரைமணி இமைக்கும் சிங்காதனத்தில் - வரிசையாகப் பதிக்கப்பெற்ற நவரத்தினங்கள் ஒளிரும் அரியணையில்

நீடு அன்பின் ஏற்றி - நிறைந்த நேசத்தோடு உட்கார வைத்து

தரைபுகழ் குசேலன் செம்பொன் தாள் துணை - உலகத்து மக்களால் போற்றப்படுகின்ற குசேலரின் செம்மையான இரண்டு கால்களையும்

விளக்கப் புக்கான் - கழுவத் தொடங்கினார்.

(குறிப்புரை) கண்ணன் தோன்றா எழுவாய். யார் பாலும் எதனையும் இரந்து வாங்காததால் குசேலரின் கைகள் புரை இல்கை எனப்பட்டன

58 வணங்குஉருப் பிணியை நோக்க
மாழைஅம் கலத்தில் கொண்டு
மணம்குலாம் தூநீர் வார்ப்ப
வயங்குதன் கரத்தால் மண்ணிப்
பணம்குலாம் முடிமேல் கொண்டான்
பகவன்மெய்ப் பத்தர் தம்பால்
இணங்கும்மெய் உரிமைத் தன்மை
என்என இசைப்பது? அம்மா!

வணாங்கு உருப்பிணியை நோக்க - அருகே அடக்கத்தோடு நின்றிருந்த உருக்குமணியைப் பார்க்க

மாழை அம் கலத்தில் மணம் குலாம் தூநீர் கொண்டு வார்ப்ப - (அவர் குறிப்பறிந்து) தங்கக் குடத்தில் வாசனை கலந்த சுத்தமான தண்ணீரை ஊற்ற

வயங்கு தன் கரத்தால் மண்ணி - (குசேலரின் கால்களை) தன்னுடைய கைகளால் கழுவித் தீர்த்தத்தை

பணம்குலாம் முடிமேல் கொண்டான் - ஆதிசேடனாகிய பாம்பு குடையாக நெருங்கிப் பொருந்துகின்ற தன் தலையின் மேல் தெளித்துக் கொண்டார்

பகவன் மெய்ப்பத்தர் தம்பால் இணங்கும் - திருமால் தம் உண்மை அடியார்கள்பால் கொள்ளும்

மெய் உரிமைத் தன்மை - அன்புரிமையின் இயல்பை

என் என இசைப்பது அம்மா - என்ன என்று விளக்கிச் சொல்வது!

(குறிப்புரை) அம்மா வியப்புடைச் சொல்.

59 *பின்தனது அங்கம் மேல் சார்*
*பிறங்கும்உத் தரியத்து அன்பால்*
*நன்றுஅரு மறையோன் செய்ய*
*நாண்மலர்ப் பாதம் ஒற்றி*
*மென் தழைப் பள்ளி ஏற்ற*
*மேவுருக் குமணி பாமை*
*மின் தழை கவரி ஆதி*
*வீசிமிக்கு உபச ரித்தார்.*

பின் - கால் அலம்பிய பிறகு

தனது அங்கம் மேல் சார் பிறங்கும் உத்தரியத்து - தன் திருமேனியின் மேல் இருக்கும் அங்கவஸ்த்திரத்தைக் கொண்டு

அரு மறையோன் செய்ய நாள் மலர் பாதம் - வேதியராகிய குசேலரின் சிவந்து அன்றலர்ந்த தாமரை போல் விளங்கும் கால்களை

அன்பால் நன்று ஒற்றி - நட்புரிமையின் காரணத்தால் நன்கு துடைத்து

மென் தழைப் பள்ளி ஏற்ற - மென்மையான தளிர்கள் பரப்பப்பெற்ற கட்டிலில் அமரச் செய்ய

மேவு ருக்குமணி பாமை - அருகில் இருந்த உருக்குமணி, சத்தியபாமை ஆகிய இரு தேவியர்களும்

மின் தழை கவரி ஆதி வீசி மிக்கு உபசரித்தார் - ஒளிர்கின்ற வெண் சாமரை முதலியவற்றால் காற்று வரும்படி விசிறி நன்றாக விருந்தோம்பினர்.

60 அத்ததி தனில்கோ பாலன்
அறைகுவன் "ஏ!ச கா!நின்
உத்தமக் கற்புஆர் பன்னி
ஓகைமிக்கு எனக்குஎன் ஈந்தாள்?
அத்தகு பொருளை ஈண்டுயான்
ஆர்தர நல்காய்" என்ன
சித்தம்உள் குசேல மேலோன்
செப்பரும் இலச்சை கொண்டே

அ ததிதனில் கோபாலன் அறை குவன் - அப்போது கண்ணபிரான் சொல்லத் தொடங்குகிறார்

ஏ சகா நின் உத்தமக் கற்பு ஆர் பன்னி ஓகை மிக்கு - நண்பரே! தங்களுடைய நிறை மிக்க மனைவி மனமகிழ்ச்சியுடன்

எனக்கு என் ஈந்தாள் - எனக்கு எதை கொடுத்துள்ளார்?

அத் தகு பொருளை ஈண்டு யான் ஆர் தர நல்காய் - அந்தச் சிறந்த பொருளை இப்பொழுது நான் துய்க்குமாறு தருவீராக

என்ன - என்று குசேல முனிவர் கேட்க

குசேலமேலோன் சித்தம் உள் செப்பரும் இலச்சை கொண்டு ஏ - குசேலர் தம் மனதில் வெளியே சொல்லமுடியாத படி வெட்கங் கொண்டு

**(குறிப்புரை)** சித்தமுள் என்புழி, அத்துச்சாரியை கெட்டது.



61 நாகம்மேல் இறைவன் றானும்
நறு மொறுத் திடஎப் பார்க்கும்
ஏக நா யகமாய் உற்ற
இவன்றனக்கு ஏழை நாம் இம்
மாகதோ ரணம்நேர் கந்தை
மாட்டு அறச் சிறிதாய் உற்ற
பாகம்ஆர் அவலை நல்கும்
பண்புஎவன் எனக்க ரந்தான்.

நாகம்மேல் இறைவன்றானும் நறுமொறுத்திட - வானுலக மன்னனாகிய இந்திரனும் பார்த்துப் பொறாமை கொள்ளும்படி

எ பார்க்கும் ஏக நாயகமாய் உற்ற இவன்றனக்கு - எல்லா உலகங்களுக்கும் ஒரே தலைவராக விளங்குகின்ற இந்தக் கண்ண பெருமானுக்கு

நாம்

மாக தோரணம் நேர் கந்தை மாட்டு - உயரத்தில் கட்டப்படுகின்ற தோரணத்தைப் போன்ற கிழிந்த துணியில்

அற சிறிதாய் உற்ற - மிகவும் குறைவாக உள்ள

பாகம் ஆர் இ அவலை - பக்குவப்படுத்தப்பட்ட அந்த அவலை

நல்கும் பண்பு எவன் என கரந்தான் - கொடுப்பது எவ்வாறு என எண்ணியவராக அதனை மறைத்துக் கொண்டார்.

(குறிப்புரை) இறைவன்றான், இவன்றனக்கு என்பனவற்றில் முறையே தானும், தன்னும் பகுதிப் பொருள் விகுதி. அளவிற் குறைவாகவும் கந்தையில் பொதிந்ததாகவும் இருப்பினும் அவல் சிறப்பாகச் செய்யப்பட்டது என்பதைக் குறிக்கப் பாகம் ஆர் அவல் என்றார்.

62 ஆனது கண்டு மாயன்
அவன்பழம் கந்தை தன்னில்
வானவர் அமுதம் என்ன
வைத்தஓர் முடியைக் கையால்
தான் அவிழ்த்து அதனில் சான்ற
தனிஅவல் விரல்மூன் றால்கொண்டு
ஆன்அளை தனிலும் நெஞ்சத்து
ஆர்வம் உற்று ஆர்தல் உற்றான்

ஆனது கண்டு - குசேலனின் செயலைப் பார்த்து

மாயன் - கண்ண பெருமான்

அவன் பழம் கந்தை தன்னில் - குசேலர் மிகப் பழைமையான கிழசல் துணியில்

வானவர் அமுதம் என்ன வைத்த ஓர் முடியை - தேவரமுதம் போலப் பொதிந்து வைத்திருந்த பொட்டலத்தை

தான் கையால் அவிழ்த்து - தானே கரங்களால் பிரித்து

அதனில் சான்ற தனி அவல் - அதிலிருந்த ஒப்பற்ற அவலை

மூன்று விரலால் கொண்டு - மூன்று விரல்களால் எடுத்து

ஆன் அளை தனிலும் நெஞ்சத்து ஆர்வம் உற்று - பசு வெண்ணெயை விட அதிகமாக உள்ளத்தால் விரும்பி

ஆர்தல் உற்றான் - சாப்பிடத் தொடங்கினான்

(குறிப்புரை) கையால் தான் அவிழ்த்து என வேண்டா கூறியது பார்க்கவே அருவருப்பளித்த அக் கந்தை மூட்டையைக் கண்ணன் தன்திருக்கரங்களால் தொட்டு அவிழ்த்தார் எனக் காட்ட மிகக் குறைவாக இருந்ததால் ஐந்து விரல்களால் எடுக்க முடியவில்லை என்க. மிகத் தூய்மை மிக்க பசு அளிக்கும் வெண்ணெயை விரும்பி உண்டதை விடப் பெருமகிழ்ச்சியுடன் புனிதம்மிக்க குசேல தம்பதிகள் அளித்த அவலை உண்டார் என்பது உவமையின் பயன்.

63 மறுதரம் தனது கையால்
மாயன்அள் ளிடலும், மாடே
உறும்உருக் குமணி மாற்றி,
"ஓர் பிடி உண்ட போதே
இறுதி இல் வளங்கள் மன்ற
எய்தின; இஃதும் துய்க்கில்
குறுகுஇர ணத்தர் ஆவோம்;
கொள்ளலை; வள்ளால்!" என்றாள்

மாயன் மறு தரம் தனது கையால் அள்ளிடலும் - கண்ண பெருமான் இரண்டாவது முறை அவலை தன் கையால் எடுக்கத் தொடங்கியதும்

மாடே உறு உருக்குமணி மாற்றி - பக்கத்திலிருந்த உருக்குமணி தேவி அச்செயலைத் தடுத்து

ஓர் பிடி உண்ட போதே இறுதி இல் வளங்கள் மன்ற எய்தின - ஒருமுறை எடுத்துச் சாப்பிட்ட உடனேயே நமக்கு முடிவற்ற சிறப்புகள் உறுதியாகக் கிடைத்துவிட்டன;

இஃதும் துய்க்கில் குறுகு இரணத்தர் ஆவோம் - இப்போது எடுக்க முயலும் இந்த அவலையும் சாப்பிட்டால் நாம் குசேலருக்குக் கைமாறு செய்ய முடியாத கடன் காரர்களாகிவிடுவோம்

வள்ளால் கொள்ளலை என்றாள் - பிறருக்கு கொடுப்பதையன்றிப் பெறுதலை அறியாத ஈகையாளரே! இனியும் அவலை எடுக்காதீர் என்று கூறினார்

(குறிப்புரை) பிடி என்பது கைநிறைந்த அளவைச் சுட்டாது. ஒருமுறை மூன்று விரல்களால் எடுக்கப்பட்ட அவலின் அளவை மட்டும் சுட்டி நின்றது. தூய ராகிய குசேலர் வழங்கிய ஒரு வாய் அவலை உண்டதற்கே ஈடு செய்யச் செல்வம் போதாது; மேலும் உண்டால் கைமாறு செய்யமுடியாத கடனாளி ஆகிவிடுவோம் என்பது கருத்து. வள்ளால் என அழைத்தது கருத்துடை மொழி

(காப்பியக் கலித்துறை)

64 அன்னை ஈதுஅறைந் திடக்குசே லனைஅரி பார்த்தே
முன்னை நாள்இயல் வர்த்தமா னங்களை மொழிவான்
தன்னை நேர் சக ஒப்புஇல்சாந் தீபனி தன்பால்
என்னை யாம்உறும் செயல்நினைந் துள்ளைகொல் இன்னம்?

அன்னை ஈது அறைந்திட - உருக்குமணி தேவி இவ்வாறு கூற

அரி குசேலனை பார்த்தே - கண்ணபிரான் குசேலரை நோக்கி

முன்னை நாள் இயல் வர்த்தமானங்களை மொழிவான் - அவர்கள் பள்ளித் தோழர்களாக இருந்த பழைய காலத்தின் செய்திகளைச் சொல்லத் தொடங்கினார்

சக தன்னை நேர் ஒப்பு இல் சாந்தீபனிதன்பால் - உலகில் தனக்கு இணையற்றவராகிய சாந்தீபனி முனிவரிடத்தில்

யாம் உறும் செயல் இன்னம் நினைந்துள்ளை கொல்? என்னை - நாம் சேர்ந்து வேதம் பயின்ற நாட் செய்திகளை இன்னமும் நினைவில் கொண்டுள்ளீர்களா?

65 தினம்ஒன் றில்குரு வானசாந் தீபனி மனைக்குஇந்
தனம்எ டுத்துநாம் இருக்கையில் சார்ந்திட வருங்கால்
இனன்ம றைந்து இருண்டு இடித்துவான் பொழிதரு காலை
மனம்அ யர்ந்துநின் றிடும்செயல் மனத்தில்உற் றுளதோ?

தினம் ஒன்றில் - ஒருநாள்

குருவான சாந்தீபனி மனைக்கு - ஆசிரியராகிய சாந்தீபனி முனிவரின் வீட்டிற்கு

நாம் இந்தனம் எடுத்து - நாம் விறகு பொறுக்கிக் கொண்டு

இருக்கையில் சார்ந்திட வருங்கால் - நம் இருப்பிடத்திற்கு திரும்பி வந்து கொண்டிருக்கும்போது

இனன் மறைந்து இருண்டு இடித்து வான் பொழிதருகாலை - சூரியன் மறைந்து இருள் சூழ்ந்து இடியோடு மழைபொழியும் போது

மனம் அயர்ந்து நின்றிடும் செயல் - செய்வதறியாது திகைத்து நின்றது

மனத்தில் உற்றுளதோ - நினைவில் இருக்கிறதா?

**(குறிப்புரை)** கண்ணபெருமான் தன் அரச நிலையைக் கண்டு குசேலர் அந்நியமாகிவிடக் கூடாதே என்பதற்காகத்தான் அவரோடு முனிவரின் ஆசிரமத்தில் சுள்ளி பொறுக்கிய அதே கண்ணன் தான் என உரிமையோடு தெரியப்படுத்திக் கொள்ளும் எளிவந்த தன்மை(சௌலப்பியம்) தொழுதற்குரியது. இருக்கையில் என்புழி இல்உருபு நான்கன் பொருளில் வந்தது.

66 *ஆம்த திக்கண்ஓர் தாருவின் கீழ்உற அங்குஓர்*
*பாந்தள் உற்றிட லால்பயத் தோடுநாம் படர்கால்*
*சாந்தம் மிக்கசாந் தீபனி யாண்டுச்சார்ந் தனர்என்று*
*ஆய்ந்து கானகத் தடைந்ததும் அறிதியோ? அன்றி*

அ ததிக்கண் - அப்போது

ஓர் தாருவின் கீழ் உற - ஒரு மரத்தடியிலே நிற்க

அங்கு ஓர் பாந்தள் உற்றிடலால் - அங்கு ஒரு பாம்பு வந்துவிடவே

நாம் பயத்தோடு படர்கால் - நாமிருவரும் அஞ்சி அந்த மரத்தை விட்டு நீங்கும் போது

சாந்தம் மிக்க சாந்தீபனி - பொறுமை மிகுந்தவராகிய சாந்தீபனி முனிவர்

கானகத்து அடைந்ததும் அறிதியோ - காட்டிற்கு வந்து சேர்ந்தது இப்போது நினைவில் இருக்கிறதா?

அன்றி - மேலும்.

67 *நனைதல் உற்றுமெய்ந் நடுங்குபு வீட்டுறு நமக்குச்*
*சினைமு திர்ந்தசேல் கண்கொள்சாந் தீபனி மனையாள்*
*புனைய ஆடைவேறு உதவலும் அத்தொழில் புரியாது*
*இனைவொடு ஆரியன் தடுத்ததும் உளத்து இருந் தனவோ?*

நனைதல் உற்று மெய் நடுங்குபு - மழையில் நனைந்து உடல் நடுங்க

வீட்டு உறு நமக்கு - வீட்டிற்குச் சென்றடைந்த நம் இருவருக்கும்

சினை முதிர்ந்த சேல் கண் கொள் சாந்தீபனி மனையாள் - கருப்பம் முதிர்ந்த சேல்மீன்களைப் போன்ற கண்களை உடையவளாகிய சாந்தீபனி முனிவரின் மனைவி

புனைய ஆடை வேறு உதவலும் - நாம் அணிந்து கொள்ள வேறு உடை கொடுக்க முன்வந்ததும்

அத்தொழில் புரியாது ஆரியன் இனைவொடு தடுத்ததும் - அதனை ஆசிரியர் இரக்கத்தோடு தடுத்து நிறுத்தியதும்

உளத்து இருந்தனவோ - உம் நினைவில் உள்ளனவா?

68 **என்று பற்பல விதம்பட குருவிடத்து இயல்போது**
**ஒன்று றும்செயல் களைஎலாம் ஒன்றுஒழி யாதே**
**நன்று றப்புகன்று உளத்தினில் நனிமிக வியந்து**
**துன்று போனகம் இன்புடன் இருவரும் துய்த்தே**

என்று பற்பலவிதம்பட - எனப்பலவாறு

குருவிடத்து இயல்போது - ஆசிரியரின் ஆசிரமத்தில் இருந்த போது

ஒன்றுறும் செயல்களை எல்லாம் - நிகழ்ந்தனவற்றை எல்லாம்

ஒன்று ஒழியாதே நன்றுஉறப் புகன்று - எதையும் விட்டுவிடாமல் நன்றாகப் பேசிக் கொண்டு

உளத்தினில் நனி மிக வியந்து - மனம் நிறைந்த வியப்புடன்

இருவரும் துன்று போனகம் துய்த்தே - கண்ணன், குசேலர் ஆகிய இரண்டு பேரும் அவ்வேளைக்குப் பொருந்துய உணவை உண்டு

69 **"உரிய என்உயிர் நண்ப!நின் உத்தம மனைநின்**
**பிரிவை ஆற்றலள் வருகை நா டுறும்பெற்றி யாள் உன்**
**புரியின் ஒல்லைநீ எய்துதி ஆல்"எனப் புகன்றான்**
**கரிய னாய் உயிர்க்கு அரியனாய்க் கலந்துறும் கரியன்**

உரிய என்உயிர் நண்ப -

நின் உத்தம மனைவி நின் பிரிவை ஆற்றலள் - உன் நல்ல இல்லாள் உன்னுடைய பிரிவை தாங்க மாட்டாதவளாகி

வருகை நாடுறும் பெற்றியாள் - உன் வரவை எதிர்பாப்பவளாக இருப்பாள்

உன் புரியின் ஒல்லை நீ எய்துதி ஆல் என - உங்கள் ஊருக்கு நீங்கள் விரைவாகச் செல்வீராக என்று

கரியன் ஆ - உலக நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் சாட்சி பூதமாகவும்

உயிர்க்கு அரியனா கலந்து உறும் கரியன் - உயிர்களால் எளிதில் அறிந்து கொள்ளமுடியாமலேயே அவற்றில் அந்தர்யாமியாகப் பிணைந்திருப்பவனுமாகிய நீல நிறத்தோன்

புகன்றான் - கூறினான்.

(குறிப்புரை) மூன்றாம் அடியில் ஆல் அசை. ஈற்றடியில் கரியன் என்பதே மும்முறை மடங்கி வந்தது.

70 புனிதம் ஆர்துவா ரகையினும் தன்நகர் போதும்
முனிவன் ஆண்டுஉறும் கிருட்டிணன் செயல்எலாம் உன்னித்
துனிபொ ருந்துதன் மனைநினைவு எண்ணி, உள் துளங்கி,
நனிகி ருட்டிணன் வாய்உப சாரமே நவின்றான்;

புனிதம் ஆர் துவாரகையினும் - பரிசுத்தம் மிக்க துவாரகையிலிருந்து

தன் நகர் போதும் முனிவன் - தன் ஊருக்குத் திரும்புகின்ற குசேலர்

ஆண்டு உறும் கிருட்டிணன் செயல் எலாம் உன்னி - அவ்வூரில் நிகழ்ந்த கண்ணபெருமானின் நடவடிக்கைகளை எல்லாம் தன் மனதிற்குள் நினைத்துக் கொண்டு

துனி பொருந்து தன் மனை நினைவு எண்ணி - வறுமையுடைய தன் வீட்டைப்பற்றிய ஞாபகத்தை நினைத்து

உள் துளங்கி - மனம் வருந்தி

கிருட்டிணன் நனி வாய் உபசாரமே நவின்றான் - கண்ணபிரான் சிறப்பாக வாயால் மட்டும் உபசார மொழிகளைக் கூறினார்.

71 அற்ப மும்பொருள் ஈந்திலன்; "நீர் அவண் அடையின்
நற்ப யன்கள்தந் திடும்கிருட் டிணன்" என நவின்ற
கற்புஅ கம்பெறும் காதலி களித்திட யான்எச்
சொற்ப கர்ந்துதேற் றிடுவன்என்று உளமிசைச் சூழ்ந்தே

பொருள் அற்பமும் ஈந்திலன் - செல்வத்தை கொஞ்சமும் தரவில்லை;

நீர் அவண் அடையின் கிருட்டிணன் நற்பயன்கள் தந்திடும் என நவின்ற - நீங்கள் துவாரகைக்குச் சென்றால் கண்ணபிரான் நல்ல உதவிகளைச் செய்வார் எனக்கூறிய

கற்பு அகம் பெறும் காதலி களித்திட - கற்புமிக்க என் மனைவி மனம் மகிழுமாறு

யான்எச் சொல் பகர்ந்து தேற்றிடுவன் என்று - நான் எதனைச் சொல்லி ஆற்றுவிப்பேன் என

உளமிசை சூழ்ந்தே - தனக்குள் ஆலோசித்து

**(குறிப்புரை)** கற்பகம் பெறும் காதலி என்பதற்குக் கற்பக மரத்திற்கு நிகரான மதிப்புடைய (பெறுமானம்) எனினும் ஆம்

72 இன்னல் தோய்இலம் பாட்டினால் மெலிந்தநாம் எய்தப்
பொன்அ ளித்திலன்; வறிதுறப் போஎனப் புகன்றான்;
அன்ன செல்வம்எய் திடில், பெரும் மோகம்வந்து அடையும்
என்ன உன்னிக்கொல் கிட்டிணன் ஈந்திலன் ஏமம்?

இன்னல் தோய் இலம் பாட்டினால் மெலிந்த நாம் எய்த - துன்பத்தைத் தருகின்ற வருமையால் நிலை குலைந்த நாம் பெறும்படியாக

பொன் அளித்திலன் - செல்வம் எதுவும் தந்தாரில்லை;

வறிதுறப் போ எனப் புகன்றான் - சும்மா போய்வா எனக்கூறி அனுப்பிவைத்துவிட்டார்;

அன்ன செல்வம் எய்திடில் - (கண்ணபிரானிடம் இருப்பதைப்போன்ற) பெரும் பொருள் வந்து சேர்ந்தால்

பெரும் மோகம் வந்து அடையும் என்ன உன்னிக்கொல் - மாயையின் பயனாகிய பெரிய மன மயக்கம் ஏற்பட்டு விடலாம் என நினைத்ததனாலோ

கிட்டிணன் ஏமம் ஈந்திலன் - கண்ணபிரான் பொன் தரவில்லை?

73 என்ற நிச்சயம் கொடுநடை கொண்டனன்; இப்பால்
மன்றல் அம்துள வோன்அரு ளால்அவன் மனையின்
மன்ற வானவர் அழுக்கறுத் திடப்பல வளமும்
துன்ற லுற்றதால் மனைவிவா ரிசமினில் துதைந்தாள்.

என்ற நிச்சயம் கொடு நடை கொண்டனன் - (செல்வம் சேர்ந்தால் மோகம் வரும் என்பதால் கண்ணபிரான் ஒன்றும் தரவில்லை போலும்) எனத் தனக்குள்ளேயே உறுதிப்படுத்திக்கொண்டு குசேலர் ஊர் திரும்பிக் கொண்டிருந்தார்

இப்பால் - அப்போது அந்தப் பக்கத்தில்

மன்றல் அம் துளவோன் அருளால் - மணம் மிக்க திருத்துழாய் மாலையை அணிந்தவராகிய கிருட்டிணனின் திருவருளால்

அவன் மனையில் வானவர் மன்ற அழுக்கறுத் திட - குசேலரின் வீட்டில் தேவர்களும் கூட நிச்சயமாகப் பொறாமைப்படும்படி

பல வளமும் துன்றலுற்றதால் - பலவகையான செல்வங்களும் நிறையத் தொடங்கிய காரணத்தால்

மனைவி வாரிசமினில் துதைந்தாள் - குசேலரின் இல்லக்கிழத்தி திருமகளைப் போலச் செழிப்புடன் விளங்கினாள்

(குறிப்புரை) வானவர் என்புழி செழிப்புமிக்க தேவலோகத்திற்கு உரியவர்களாகிய தேவர்களும் என உயர்வு சிறப்பும்மை விரிக்க

(வண்ண எண்சீர் விருத்தம்)

*தன்ன தந்ததன தானதன தானனா*

74 *நன்மை தங்குதன தூர்வயின்நி லாவியே*
*நண்ணி டும்தன்மனை மாடணுகி நேடவே*
*தின்மை தங்கலகி லாதமிடி நாமம்ஆர்*
*செம்மல் தந்திடனை ஆகிஉள வீடுதான்*
*இன்மை கண்டுதிசை நாலினையும் நாடியே*
*என்ன விந்தை?கன வேகொல்? நன வேகொலோ?*
*தன்மை இங்கிதைமுன் ஆர்பவர்முன் ஏகியே*
*சம்மி யம்படஉள் ஓர்வம்என மேயினான்.*

நன்மை தங்கு தனது ஊர்வயின் - நலம் எப்போதும் நிலைத்துள்ள தம்முடைய ஊரினிடத்து

நிலாவியே நண்ணிடும் தன் மனை மாடணுகி நேடவே - பொருந்தியிருக்கும் தன்னுடைய வீட்டினருகே சென்று தேட

அலகு இலாத தின்மை தங்கு - கணக்கற்ற தீமைகள் நிறைந்த

மிடி நாமம் ஆர் செம்மல் தந்திடு அனை ஆகி உள வீடுதான் - வறுமை என்னும் பெயர் கொண்ட தலைவனை அளிக்கும் தாயைப்போன்று விளங்குவதாகிய தன் மனையை

இன்மை கண்டு - அவ்விடத்தில் இல்லாததைப் பார்த்து

திசை நாலினையும் நாடியே - நான்கு திக்குகளிலும் தேடி

என்ன விந்தை - என்ன ஆச்சரியம்

கனவேகொல்? நனவேகொலோ? - நான் காண்பது கனவா? நனவா?

இங்கு இது தன்மையை - (தன்மை இங்குஇதை) இந்த இடத்தில் இது நடந்த விதத்தை

ஆர்பவர் முன் ஏகியே - (இந்தப் புதிய வீட்டில்) பொருந்தியிருப்பவர்களின் எதிரே சென்று

சம்மியம் பட முன் உள் ஓர்வம் என - தெளிவாகப் புரியும்படி முதலில் அறிந்து கொள்வோம் என்று

மேயினான் - (தன் பழைய வீடு இருந்த இடத்தை) அணுகினார்.

**(குறிப்புரை)** குசேலர் தன் இல்லத்தை வறுமையின் தாய் என்கிறார். பழைய குடிசை மாளிகை ஆகி உள்ளதே! இது கனவா? யார் உள்ளே இருக்கிறார்களோ அவர்களைக் கேட்டு உண்மையைத் தெளிவாக அறிந்து கொள்வோம் எனக் குசேலர் கருதுகிறார். சம்மியம் அறிவு. சம்மியம்பட அறியுமாறு.

தய்ய தந்ததன தானதன தானனா

75 துய்யன் ஒன்றும்மனை சேர்வயினில் மேருநேர்
சொல்லி டும்பெரிய மாளிகைகு லாவலால்
ஐயம் இன்றெவர்அ யோநம் இடம் ஒவியே
ஐதில் இங்கொர்மனை யேசெய்ததில் மேவினார்;
மெய்ய திங்குளபொன் வாயில்வதி பாலரால்
மெல்ல இங்குதெரி வோம்எனஉள் மேவு போழ்து
ஐய பொன்தடிகை மேவும்எண்இ லாதபேர்
அஃகல் இன்றிமகிழ் காரியர்கள் ஆகியே

துய்யன் ஒன்றும் மனை சேர் வயினில் - பரிசுத்தமானவராகிய குசேலர் வசித்துவந்த வீடு இருந்த இடத்தில்

மேருநேர் சொல்லி டும் பெரிய மாளிகை குலாவலால் - மேருமலையை இணையாகச் சொல்லத்தக்க பெரிய மாளிகை இருப்பதால்

ஐயம் இன்று - சந்தேகம் இல்லாமல்

நம் இடம் ஒவியே - நம்முடைய வீட்டை நீக்கிவிட்டு (இடித்த பிறகு)

ஐதில் இங்கு ஓர் மனையே செய்து - அழகாக இந்த இடத்தில் புதிதாக ஒரு வீட்டைக் கட்டி

அயோ எவர் அதில் மேவினார் - ஐயகோ! யாரோ அதில் குடியேறிவிட்டனர்;



இங்கு உள பொன் வாயில் வதி பாலரால் - இங்கு அழகிய வாயிலைக் காத்து நிற்கும் காவலர்களால்

அது மெய் இங்கு தெரிவோம் என - அந்த உண்மையை இப்பொழுது அறிந்து கொள்வோம் என்று

மெல்ல உள் மேவு போழ்து - மெதுவாக நினைத்த போது

ஐய பொன் தடி கை மேவும் எண் இலாத பேர் - அழகிய தங்கத்தடிகளைக் கரங்களில் தாங்கிய பலர்

அஃகல் இன்றி மகிழ்காரியர்கள் ஆகியே - குறையாத உவகை கொண்ட பணியாளர்களாக

*தன்ன தானதன தானதன தானனா*

76 *எண்இ லாதபல ஏவலர்க ளாய்உளோர்*
*இன்ன லோடுபணி காணுறஉ லாவுசீர்*
*கண்ணில் நாடி, இவர் பால் அதுவி னாவில்நேர்*
*கண்ணி யேவிடைசொல் வார்கொல் நமொ டேஎனா*
*உள்நி லாவுபய மோடு, தலை வாயிலூடு*
*ஒண்மை சால்மதியன் மேவ,மனை மீதிலே*
*பண்நி லாவுசல சாசனியின் மேயஓர்*
*பன்னி நாதன்வரல் ஆனதெரி வாயினாள்*

எண் இலாத பல ஏவலாளர்களாய் உளோர் - கணக்கற்ற வேலையாட்கள்

இன்னலோடு பல பணி காணுற உலாவு சீர் கண்ணில் நாடி - கஷ்டப்பட்டு பல வேலைகளைச் செய்து கொண்டு அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கும் சிறப்பைப் பார்த்து

ஒண்மை சால் மதியன் - நல்ல அறிஞராகிய குசேலர்

இவர் பால் அது வினாவில் - இவர்களிடத்தில் (இந்த வீட்டில் இருப்பவர் யார் என்னும்) அதனைக் கேட்டால்

நமொடே நேர் கண்ணியே விடை சொல்வார் கொல் எனா - நமக்கு எதிரில் நின்று பதில் கூறுவார்களா என்று

உள்நிலாவு பய மோடு தலை வாயிலூடு மேவ - மனத்தில் அச்சத்தோடு வாயிற்படியை நோக்கிச் செல்ல

மனை மீதிலே மேய - வீட்டில் இருந்தவளாகிய

பணி நிலாவு சலசா சனியின் ஓர் பன்னி - புகழ் மிக்க மலர்மகளை நிகர்ந்தவளும் ஒப்பற்றவளுமாகிய மனைவி

நாதன் வரல் ஆன தெரிவு ஆயினாள் - தன் கணவனின் வருகையைத் தெரிந்து கொண்டாள்

(குறிப்புரை) இன்னல் என்றது பணிப்பளுவை உணர்த்தி நின்றது. சலசாசனி சலச ஆசனி, தாமரையை இருக்கையாக உடையவள். வடமொழி தீர்க்க சந்தி. இன் உவம உருபு. ஓர் என்பது எண்ணைக் குறியாமல் ஒப்பற்ற என நின்றது. என்னை? குசேலற்கு இல்லாள் ஒருத்தியே ஆதலின். பன்னி - பத்னீ என்பதன் பாகதச் சிதைவு.

தனத்த தத்ததன தானதன தானனா

77 அரைக்க ணத்தில்எதிர் போய்நம்இறை மேவினார்
அழைத்தி வட்கொணரு வீர்கள் என ஓதுகால்
இரைச்சல் மிக்க படை நான்மைபுடை சூழவே
இரத்தி னக்கல் நிரை பாவும் ஒரு தேரின்மேல்
விரைத்த நெய்க்குழல்மி னார்கவரி வீசுறா
வியப்பு றப்பல்இசை பாடிநடம் ஆடவே
வரைப்பில் பற்பலர் பொன் ஆர்தடிகொள் வோர்களாய்
வழிக்கண் உற்றவர்கள் யாவரையும் ஓவியே

நம்இறை மேவினார் - நம்முடைய தலைவர் வந்துவிட்டார்;

அரைக்கணத்தில் எதிர்போய் அழைத்து இவண் கொணர்வீர்கள் என ஓதுகால் - உடனே சென்று இங்கு அழைத்து வருவீராக என்று சொல்ல

இரைச்சல் மிக்க படை நான்மை புடை சூழவே - ஓசை மிகுந்த யானை, குதிரை, தேர், காலாள் என நால்வகைப் பட்ட சேனைகளும் பக்கத்தில் சூழ்ந்து வர

இரத்தின கல் நிரை பாவும் ஒரு தேரின் மேல் - வைரம் முதலிய கற்கள் வரிசையாகப் பதிக்கப்பெற்ற ஓர் இரதத்தில்

விரைத்த நெய்க் குழல் மினார் கவரி வீசுறா - வாசனைத் தைலத்தைப் பூசிக் கொண்ட கூந்தலை உடைய பெண்கள் சாமரை இரட்ட

வியப்பு உற பல் இசை பாடி நடம் ஆடவே - பார்ப்பவர்கள் மிக அதிசயிக்கும்படிப் பல பாடல்களைப் பாடிக்கொண்டே நாட்டியம் ஆடிவர

வரைப்பு இல் பற்பலர் - கணக்கற்ற பல காவலர்கள்

பொன் ஆர் தடி கொள்வோர்களாய் - தங்கத்தாலாகிய தடிகளை ஏந்தியவர்களாக

வழிக்கண் உற்றவர்கள் யாவரையுமே ஓவி - வழியில் வருபவர்கள் எல்லோரையும் விலக்கி

தானன தந்ததன தாத்ததன தானனா

78 நிலாவு கின்றசெயல் பார்த்து வெருள் மேவியே
நிடேதம் என்பவைகள் நீத்தமறை யோன்ஓர் சார்
குலாவ அங்கவன்மு னாப்பலரும் மேவிநீள்
குசேல இன்தவ!ப ராக்!என்மொழி ஓதியே
சுலாவி அன்பினொடு தாட்டுணைகள் பேணியே
சுவாமி! தங்கிடுவீர் தேர்க்கண்என ஓதலால்
விசாலம் மிஞ்சிரத மேற்குலவு போதில்மா
விநோதம் மிஞ்சியது யாக்கை அரி மானவே.

நிலாவுகின்ற செயல் பார்த்து - தன் எதிரே நடப்பனவற்றைக் கண்டு

வெருள் மேவியே - அச்சம் கொண்டு

நிடேதம் என்பவைகள் நீத்த மறையோன் - தவசிகள், வேதியர் ஆகியவர்களுக்கு விலக்கப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும் முழுமையாக நீத்துவாழ்கின்ற அந்தணராகிய குசேலர்

ஓர் சார் குலாவ - (இந்த ஆடம்பரங்களுக்கு வழி விட்டுவிட்டுத்) தனியாக ஒருபுறம் ஒதுங்க

அங்கு அவன் முனாப்பலரும் மேவி - அப்போது அவன் எதிரே வந்தவர்களில் பலர் சென்று

நீள் குசேல இன் தவ! பராக்! என்மொழி ஓதியே - சிறப்பு வாய்ந்த குசேலரே! இனிய தவச்செல்வரே! வாழ்க! வாழ்க! என கோஷங்கள் எழுப்பிக் கொண்டு

சுலாவி - அவரைச் சூழ்ந்து கொண்டு

அன்பினொடு தாள் துணைகள் பேணியே - மரியாதையோடு கால்களில் விழுந்து வணங்கி

சுவாமி! தங்கிடுவீர் தேர்க்கண் என ஓதலால் - ஐயா! இரதத்தில் எழுந்தருளுங்கள் எனக் கூறியதலால்

விசாலம் மிஞ்சு இரத மேல் குலவு போதில் - அழகு மிகுந்த தேரில் ஏறி அமர்ந்த போது

யாக்கை அரி மானவே மா விநோதம் மிஞ்சியது - குசேலரின் உடலும் திருமாலைப் போல அழகும் வலுவும் மிக்கதாக மாறி மிகுந்த வியப்பளிப்பதாகியது.

(குறிப்புரை) நிடேதம் நிஷேதம் என்பதன் தமிழ் வடிவம். பராக் பாராச் சேவகர்கள் வாழ்த்திக் கூறும் சொல்; தலைவரின் வருகையை உணர்த்தி எனையோரை எச்சரிக்கும் நோக்கம் உடையது. விநோதம் இயல்புக்கு மாறான ஆனால் மகிழ்ச்சி ஊட்டும் செயல்.

தய்யான தந்ததன தானதன தன்னனா

79 அவ்வாற மைந்தமைகு சேலன்உளம் முன்னுறா
அல்லேய்மு குந்தன்அருள் ஆடல்என எண்ணியீ(டு)
ஒவ்வாவி யன்குலவு மாளிகையுள் மன்னு போ(து)
ஒய்யாரம் மிஞ்சுபல மாதர்பணி பண்ணவே
செவ்வாரி சங்குலவு மா அனைய பன்னிநீள்
சில்லோதி யின்கணனை சூடிஎழில் மின்னைநேர்
வெவ்வாளி யின்பிடர்கொள் ஓர்தவிசில் நண்ணியே
மெய்யோனு டன்குலவி னாள்சுகிர்தம் மன்னவே.

அவ்வாறு அமைந்தமை குசேலன் உளம் முன்னுறா - தன் உடல் கண்ணபெருமானின் சாரூபம் பெற்றதைக் குசேலர் எண்ணிப்பார்த்து

அல் ஏய் முகுந்தன் அருள் ஆடல் என எண்ணி - இருளைப் போன்ற திருமேனியனாகிய கண்ண பெருமானின் திருவிளையாடல் என நினைத்து

ஈடு ஒவ்வா வியன் குலவு மாளிகையுள் மன்னுபோது - இணையற்ற பெருமைகள் நிறைந்த மாளிகைக்குள்ளே சென்ற காலை

ஒய்யாரம் மிஞ்சு பல மாதர் பணி பண்ண ஏ - அழகிய பணி மகளிர் பலர் குற்றேவல் புரிய

செ வாரிசம் குலவுமா அனைய பன்னி - செந்தாமரையில் வாழும் திருமகளைப் போன்றவளாகிய குசேல பத்னி

நீள் சில்லோதியின்கண் நனை சூடி - நீண்டதும் சிலவாயதுமாகிய கூந்தலில் மலர்களை அணிந்து கொண்டு

எழில் மின்னை நேர் - அழகிய மின்னற் கொடியைப் போல

வெவ் ஆளியின் பிடர்கொள் ஓர் தவிசில் நண்ணியே - (சிங்கத்தின் பின் கழுத்தில் அமைந்ததாகச் செய்யட்ட) ஓர் அரியணையில் உட்கார்ந்து கொண்டு

சுகிர்தம் மன்ன ஏ - இன்பம் நிலைபெறுமாறு

மெய்யோனுடன் குலவினாள் - மெய்யன்புடைவராகிய குசேலரோடு சேர்ந்திருந்தாள்.

(அறுசீர் விருத்தம்)

80 *சிங்கா தனம்மேல் கணவனுடன்*
*சேர்ந்து விளங்கும் பெருந்தேவி*
*பொங்கா தரவில் தவன்இருதாள்*
*போற்றி உவகைப் பொலிவினுடன்*
*"மங்கா வளம்சால் துவாரகையின்*
*மாட்டு நடந்த விபவம்எலாம்*
*இங்கார் வத்தோ டியான் அறிய*
*விளம்பி யருள்வீர்" எனஇரப்ப*

கணவனுடன் சேர்ந்து சிங்காதனம் மேல் விளங்கும் -

பெருந்தேவி - பெருமைக்குரிய மனைவி

தவன் இருதாள் பொங்கு ஆதரவால் போற்றி - குசேலரின் இரண்டு பாதங்களையும் மிகுந்த அன்போடு வணங்கி

உவகைப் பொலிவுடன் - பெருமகிழ்ச்சியுற்றவளாக

மங்கா வளம்சால் துவாரகையின் மாட்டு நடந்த விபவம் எலாம் - குறையாத வளப்பம் பொருந்திய துவாரகாபுரியில் நிகழ்ந்த சிறப்புகள் எல்லாவற்றையும்

இங்கு ஆர்வத்தோடு யான் அறிய - இப்போது ஆவல் மிக்கவளாக இருக்கும் நான் தெரிந்து கொள்ளும்படி

விளம்பியருள்வீர் எனஇரக்க - சொல்லூவீராக எனப் பணிவுடன் வேண்ட

81 *மின்னை நிகர்சிற் றிடைமடவாள்*
*வினவ லோடும் மெய்த்தவன்றான்*
*தன்னை மறந்து பரவசம் உள்*
*தழைத்தாங் கியன்ற தன்மைஎலாம்,*
*"என்னை எனயான் சாற்றிடுவன்!"*
*என்னப் பரிவோ டாண்டியல் சீர்*
*தன்னை உரைப்பக் கேட்டலுமே*
*தையல் உவகை தழைத்தனள் ஆல்*

மின்னை நிகர் சிற்றிடை மடவாள் வினவலோடும் -

மெய்த்தவன்றான் தன்னை மறந்து பரவசம் உள் தழைத்து -

ஆங்கு இயன்ற தன்மை எலாம் - துவாரகையின் செய்திகள் எல்லாவற்றையும்

என்னை என யான் சாற்றிடுவன் என்ன - நான் எப்படி விளக்கிச் சொல்ல வல்லேன் என்று

பரிவோடு ஆண்டு இயல் சீர் தன்னை உரைப்ப - உண்மையான அன்போடு அவ்வூரில் நடைபெற்ற சிறப்புகள் எல்லாம் விரிவாக எடுத்துரைக்க

தையல் கேட்டலுமே - அம்மங்கைநல்லாள் அவ்வரலாற்றைச் செவி மடுத்த மாத்திரத்தே

உவகை தழைத்தனள் ஆல் பெருமகிழ்ச்சி கொண்டாள்

(எழு சீர் விருத்தம்)

82 தாங்கரும் மிடியால் தளர்வுறுங் காலம்
தான் அறி யாதுறும் செயல்போல்
ஓங்கரும் செல்வம் பெற்றகா லையினும்
உளமிசை உணர்கிலன் ஆகிப்
பூங்கரும் பனைஈன் றவன்அருள் வடிவாம்
புண்டரீ கப்பதத் துணைக்கண்
நீங்கரு நெஞ்சம் படைத்தறம் பெருக்கி
நிலமிசை வாழ்ந்தனன் குசேலன்

தாங்கரும் மிடியால் தளர்வுறும் காலம் - பொறுக்க இயலாத வறுமையால் வாடிக்கொண்டிருந்த போது

தான் அறியாது உறும் செயல் போல் - தான் அவ்வறுமையைப் பற்றி நினைக்காமலேயே இருந்ததைப் போன்று

குசேலன் ஓங் கரும் செல்வம் பெற்ற காலையினும் - குசேலர் மிகப் பெருமளவில் பொருள்வளம் பெற்ற போதும்

உள மிசை உணர்கிலன் ஆகி - அதனைப் பெரிதாக எண்ணாதவராக

பூங்கரும்பனை ஈன்றவன் அருள் வடிவு ஆம் - கரும்பு வில்லை உடைய மன்மதனைப் பெற்றவராகிய திருமாலின் திருவருள் வடிவாகிய

புண்டரீகப் பதத் துணைக்கண் நீங்கரு நெஞ்சம் படைத்து - இரு தாமரைத் திருவடிகளிலேயே சற்றும் விலகாமல் பதித்த உள்ளத்தை உடையவராக

நிலமிசை அறம்பெருக்கி வாழ்ந்தனன் - இவ்வுலகில் நற்செயல்களைச் செய்துகொண்டு வாழ்ந்திருந்தார்

(குறிப்புரை) அறியாதுறும் செயல் போல் உணர்கிலனாகிக் குசேலன் நெஞ்சம் படைத்து அறம் பெருக்கி நிலமிசை வாழ்ந்தனன் எனப் பொருள் முடிபு காண்க. கொடிய வறுமையிலும் நிறைந்த செல்வத்திலும் குசேலர் கலக்கமோ, பெருமிதமோ கொள்ளாமல் சாந்தமோடு இறையன்பிலேயே திளைத்திருந்தார்.

83 பொய்த்திற மாயா புன்புல போகம்
பொருள் எனக் கொண்டிடார் ஆகி
மெய்த்திறப் பகவன் திருவடித் துணையே
மெய்த்துணை ஆம்எனக் கொள்ளும்
உத்தமப் பத்திப் பரவையுள் படிதல்
உற்றிடும் யோகியர் ஆனார்
எத்திறம் உறினும் ஓர் இடை யூறும்
எய்தலர்; சரதம் ஆம் மாதோ.

பொய் திற மாயா புன் புல போகம் - நிலைக்காமல் அழியும் தன்மை வாய்ந்தனவும் மாயா காரியமாக உள்ளதும் இழிவான ஐம்புலன்களால் துய்க்கப்படுவனவும் ஆகிய நுகர்வுகளை

பொருள் எனக் கொண்டிடார் ஆகி - பெரியனவாகக் கருதாமல்

மெய் திற பகவன் திருவடி துணையே - அழிவற்ற பரம்பொருள் ஆகிய திருமாலின் இரண்டு திருவடிகளையே

மெய் துணை ஆம் என கொள்ளும் - ஆன்ம ஈடேற்றத்திற்கு உதவும் உண்மையான துணை ஆகும் என உறுதியாகக் கடைபிடிக்கும்

உத்தம பத்திப் பரவையுள் படிதல் உற்றிடும் யோகியர் ஆனார் - மிக உயர்ந்த இறையன்பாகிய கடலில் ஆழ்ந்துள்ள யோகியர்கள்

எத்திறம் உறினும் ஓர் இடையூறும் எய்தலர் - (வறுமை, வளமை; உயர்வு, தாழ்வு; வலிமை, நோய்) எந்நிலை ஏற்பட்டாலும் அதனால் தம் பக்தி நெறிக்கு ஒரு தடங்கலும் அடைய மாட்டார்கள்

சரதம் ஆம் மாதோ - இது உறுதியான உண்மையாகும்

(குறிப்புரை) இது இந்த குசேல வரலாற்றின் பாவிகமாகக் கந்தசாமி சுவாமிகள் கூறும் கவிக்கூற்று. மாது ஓ ஈற்றசை.

84 சமலவல் வினையின் தொடக்கனு அளவும்
தன்உளம் சார்கலன் ஆகிக்
கமலவான் தளம்சால் புனல்எனப் புவியில்
கலந்துறு குசேலமா தவன்றான்
விமலமெய்க் கற்போ டரிஉவந் துண்ணும்
விருந்தளித் திட்டதன் மனையோடு
அமலஆ னந்த வடிவனாம் அரிதாள்
அடைந்தனன் அமரர்எத் திடவே.

ச மல வல்வினையின் தொடக்கு அணு அளவும் தன் உளம் சார்கலன் ஆகி - ஆணவம் ஆகிய மூல மலத்தோடு கூடியதும் வலிமை மிக்கதுமாகிய வினைகளின் தொடர்பு ஒரு சற்றும் தன் மனதின்கண் பொருந்தாதவராக

வான் கமல தளம் சால் புனல் என - அகலமான தாமரை இலையில் படிந்த நீரைப் போன்று

புவியில் கலந்து உறு குசேல மாதவன்றான் - உலகில் வாழ்ந்தும் உலகியலில் பட்டும் படாமலும் ஒழுகி வந்த குசேல முனிவர்

விமல மெய்க் கற்போடு - தூய்மையும் உண்மையும் மிக்க நிறையுடன்

அரி உவந்து உண்ணும் விருந்து அளித்திட்ட - கண்ணபெருமானே விரும்பி அருந்துமாறு அவலைச் செய்து அளித்திட்ட

தன் மனையோடு - தன் இல்லக்கிழத்தியோடு

அமல ஆனந்த வடிவன் ஆம் அரிதாள் அமரர் ஏத்திடவே அடைந்தனன் - இயல்பாகவே குற்றங்களினின்றும் நீங்கியவனும், இன்ப உருவினனும் ஆகிய திருமாலின் திருவடிக் கண் வானவர்களும் கண்டு போற்றுமாறு சென்றடைந்தார்.

(குறிப்புரை) குசேலமாதவன் தன் மனைவியோடு அமரர் ஏத்திட அரிதாள் அடைந்தனன் எனப் பொருள் முடிபு காண்க. வினையாகிய மலம் (கன்ம மலம்) ஆணவத்தை அடக்குவதற்காகவே இணைக்கப்படுதலின் "சமல வல்வினை" என்றார். இங்கு மலம் என்பது மூல மலத்தை மனத்துக்கண் மாசிலன் ஆதலே அறத்திற்கு அடிப்படை ஆதலின் தன்உளம் சார்கலன் ஆகி என்றார்இனி மனம் என்னும் கரணம் ஏனைய மொழி, மெய் ஆகியவற்றிக்கும் உபலட்சணம் எனினும் ஆம். பக்தமான்மிய ஆசிரியர் முருகக் கடவுளை வழிபடு தெய்வமாகக் கொண்டவர்; அறுசமய மூர்த்தங்களையும் சமமாகக் காணும் நெறியினர்; மெய்ப் பொருளியலைப் பொருத்த வரை கந்தசாமி சுவாமிகள் சைவ சித்தாந்தத்தின் பால் மிக்க ஈடுபாடு கொண்டவர். எனவே தான் திருமாலைப் பற்றிய வரலாறாக இருப்பினும் உரை சைவ சித்தாந்தத்தை ஒட்டி எழுதப்பட்டது. நூற்போக்கும் அவ்வாறே இருப்பதை நுட்பமாக நோக்கி அறிக.



பக்தமாஹிமிய சாரம்

ஆகிய

## குருதோத்திரமாலை

(பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்)

பொய்ஆம் உலகந் தனை உளத்தோர்
பொருளாக் குறியா துன்றன்இரு
பொன்னங் கமலத் தாள்த்துணையே
புந்தித் தலத்தில் புணர்ந்துறும்ஓர்
மெய் ஆர் தவத்துக் குசேலனைநேர்
மேன்மை பொருந்தும் பெரியோரே
மேவுன் பெரும்சோ தனைசகிக்கும்
விறல்பெற் றுடையோர் அல்லாமல்
பைஆடு அரவம் அனையபுலப்
பகையால் உள்ளம் பதைபதைத்துப்
பார்மேல் உழலும் என்அனைய
பருவர்க் கியலா தாதலின்உள்
எய்யா வண்ணம் உன்அருள்ப்பேறு
ஈந்தென் வினைகள் இறப்புரியாய்
இராம னந்தப் பெயர்கொடெனது
இதயத் திலங்கும் பெருமாளே!

பொய் ஆம் உலகந்தனை உளத்து ஓர் பொருளா குறியாது - நிலையற்றன ஆகிய செல்வங்களைத் தம் மனத்தில் ஒரு பெரிய செல்வமாகக் கருதாமல்

உன்றன் இரு பொன்னம் கமலத் தாள்த் துணையே - தேவரீரின் பெருமையிற் சிறந்தனவும், அழகியனவும், ஆகிய தாமரைத் திருவடிகள் இரண்டையுமே

புந்தி தலத்தில் புணர்ந்துறும் - தம் அறிவிலும் உள்ளத்திலும் பதிய வைத்துக்கொண்டுள்ள

ஓர் மெய் ஆர் தவத்து குசேலன் நேர் - ஒப்பற்ற உண்மை தவசி ஆகிய குசேலருக்கு இணையாக

மேன்மை பொருந்தும் பெரியோரே - மாண்புமிக்க சான்றோர்களே

உன் மேவு பெரும் சோதனை சகிக்கும் - தேவரீரால் செய்யப்படுகின்ற பெரிய சோதனைகளைத் தாங்கிக் கொண்டு அறநெறி தவறாமல் ஒழுகும்

விறல்பெற்றுடையோர் - ஆற்றலுடையவராவர்

அல்லாமல் - அத்தகையவர்கள் அன்றி

பை ஆடு அரவம் அனைய புலப் பகையால் - படம் எடுத்து ஆடுகின்ற பாம்பைப் போன்ற ஐம்புலன்கள் ஆகிய விரோதிகளால்

உள்ளம் பதைபதைத்து - மனம் கலங்கி

பார்மேல் உழலும் என் அனைய பருவர்க்கு - உலகியலில் சிக்கிச் சுழல்கின்றவனாகிய அடியேனைப் போன்ற அபக்குவிகளுக்கு

இயலாது - (சோதனையைத் தாங்கிக் கொள்ள); - முடியாது

ஆதலின் - அக்காரணத்தால்

இராமானந்தப் பெயர் கொடெனது இதயத் திலங்கும் பெருமாளே - இராமானந்த சுவாமிகள் என்னும் திருநாமத்துடன் எளியேனின் உள்ளத்தின் கண் ஒளி வீசிக் கொண்டு எழுந்தருளியுள்ள குரு நாதரே!

உன் அருள் பேறு ஈந்து - (தேவரீரே, தங்கள் கருணையால்) திருவருட் பேற்றினை வழங்கி

என் உள் எய்யா வண்ணம் - அடியேனின் மனம் வருந்தாதபடி

வினைகள் இற புரியாய் - என் இருவினைகளையும் அழித்தருள்வீராக.

(குறிப்புரை) கந்தசாமி சுவாமிகள் கௌமார நெறிக்கிணங்கத் தன் ஞான தேசிகரின் நாம ரூபங்களையே பரம்பொருளின் பெயர்வடிவங்களாகக் கொண்டவர். அம்முறையில் பக்தமான்மியத்தின் ஒவ்வொரு வரலாற்று முடிவிலும் அச் சரித்திர சாரத்தைக் குறிப்பிட்டுச் சுவாமிகளின் தோத்திரம் ஒன்றை அமைத்துள்ளார். இத் தோத்திரம் இது.

"இரு பொன்னங்கமலத் தாள்த்துணை" என்னும் சொற்றொடரில் இரு, துணை என்னும் இரண்டு சொற்களையும் இரட்டுற மொழிதலாக அமைத்த நயம் பாராட்டிற்குரியது. இரு தாள் துணை என்பதற்கு இரண்டு திருவடிகள் ஆகிய ஆதரவு என்பது ஒரு பொருள் (இரு இரண்டு; துணை உதவுவது); பெருமை மிக்க இரு திருவடிகளுமே என்பது மற்றோர் பொருள் (இரு பெருமை பொருந்திய; துணை இரண்டு)

இவ்விருத்தத்தில் வாழ்விலும் தாழ்வினும் இறைவனைத் தவிர வேறு எதன் மீதும் பற்று வைக்காதிருந்த குசேலரின் மனநிலை விதந்துரைக்கப்படுகிறது. இதுவே இவ்வரலாற்றின் படிப்பினை.



# நூலாசிரியர் பற்றி....

தமிழ்ப் பெருங்கவிஞராக விளங்கிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் கொங்கு நாட்டு கச்சியப்பர் எனப் போற்றப்பட்டவர். சிரவையாதீன முதல்வர் திருப்பெருந்திரு இராமானந்த சுவாமிகளின் பூர்வாசிரமத்தம்பி ஆகிய சைவத்திரு. வெங்கிடசாமிக் கவுண்டருக்கும் திருமதி. குட்டியம்மாளுக்கும் தோன்றியவர். காலம் 1892 ஆம் ஆண்டு முதல் 1948 ஆம் ஆண்டு வரை.

1923 துந்துபி ஆண்டு தை 16 ஆம் நாள் பழனி தண்டபாணி சந்நிதியில் கௌமார மடாலயத்தின் இரண்டாம் குருமகா சந்நிதானங்களாக பட்டம் ஏற்றுக் கொண்டார். சுவாமிகளின் கவிபுனை ஆற்றல் அளப்பரியது.

சுவாமிகள் பக்தமான்மியம், மூன்று தலபுராணங்கள், ஆறு பிள்ளைத்தமிழ்கள், கோவை கலம்பகம், சிலேடை வெண்பா, யமக அந்தாதிகள், திரிபந்தாதி, பல மாலைகள், அந்தாதிகள், பதிகங்கள் பல இயற்றியுள்ளார். இவை தவிர இராமானந்த விஜயம், இகபரசாதன விளக்கம் என இரண்டு உரைநடை நூல்களும் இயற்றியுள்ளார். ஏறத்தாழ 15000 பாடல்களை இயற்றியருளினார் சுவாமிகள்.

அன்பர்களின் அழைப்பினை ஏற்று ஊர்கள் தோறும் சென்று திருப்பணிகள் செய்து வைத்தும், புதிய திருக்கோயில் அமைத்தும், திருக்குட நீராட்டு செய்து வைத்தார்கள்.

கந்தமுனி வாழ்வைக் கருதுமொரு நல்லூழைத்
தந்தஇறை தாளே சரண்.

சௌமி பிரிண்டர்ஸ், பேரூர்.
அலைபேசி : 98422 52779.